# THE VIVEKA CHINTAMANI

## Monthly Tamil Magazine and High Thought Review,

Devoted to the Diffusion of Truth and Knowledge.

WITH THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS, ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS

God is Love: Knowledge is Power: OM.
"Live and Learn"—"ஓதுவதொழியேல்."
SATYAMEVA JAYATI.

Vol. XV.

May 1906-April 1907.

# விவேக சிந்தாமணி

அறிவைப்பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை

அறிவுடையா ரெல்லாமுடையார்
அறிவிலா ரென்னுடையரேனுமிலர்—திருக்குறள்
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.

15-ம் புத்தகம்.

1906-ஞு மேமீ முதல் 1907-ஞு ஏப்ரல்மீ வரை.

PUBLISHED BY

The Secretary, Diffusion of Knowledge Agency,

Anandashrama, Triplicane, Madras,
For SATYANANDA, of the ANANDA MISSION,

1906-1907.

# TABLE OF CONTENTS.

## VOL XV. (May 1906—April 1907.)

### No. 1. for MAY, 1906.



### 1906-ம் ௵ மே௴ 1-வது சஞ்சிகை.



### No. 2. for JUNE, 1906.



### 1906-ம் ௵ ஜூன்௴ 2-வது சஞ்சிகை.



### No. 3. for JULY, 1906.



### 1906-ம் ௵ ஜூலை௴ 3-வது சஞ்சிகை.

# TABLE OF CONTENTS.

# TABLE OF CONTENTS.

உ

*" Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*Seek Truth wherever you can find it, But, "Make your choice and stick to it till you reach the End.*

ஸத்யம்வத.—**Speak the Truth**.

"Hitch your Wagon to a Star." "To Thine Own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati**.

புத்தகம் 15.] 1906-ம்வருடு மேமீ. [சஞ்சிகை 1.

# THE RIGHT HON'BLE JOHN BURNS, M. P.

*A Lesson from His Life.*

"He (Charles XII of Sweden) inspired me with the idea of triumphing over physical weakness, weariness and pain. To inure his body to bear all manner of hardships, indifferently to bathe in ice, or face the torrid rays of the sun, to discipline his physical powers by gymnastics, to make his body an instrument as tempered steel and at the same time to have that body absolutely at the disposition of the mind, that seemed to me, conduct worthy of a hero. And so, boylike, I tried to imitate him, and succeeded, at least so far as to be happily indifferent to the circumstances of my personal environment."—*John Burns.*

"The world is my country and to do good is my religion."—*Tom Paine's aphorism which affected the course of John Burns' life.*

"I have always held the view and I shall continue to hold it, that mere material improvement in man's environment, whether by Municipalities or States is not enough. Men are the sport of circumstances, when circumstances should be the sport of men. Just as one is compelled to divert one's passion into rational enjoyment, and discipline pleasure, so, whilst uplifting men, women and children by Municipal and Imperial agencies, one must insist upon personal effort, individual will, the necessity of character, the obligation of sacrifice and control; not too much officialism, less bureaucracy—in fact, a minimum of restriction, but example everywhere. We are a free people and it is better that men are taught that volition, initiative, and desire often yield, even with limited opportunities, a greater result for all than an

over mechanised society that has only material improvements as its objective. "Man does not live by bread alone"......I mean...that it is not sufficient that society should consist of well-fed, regularly employed, materially prosperous people. Concurrent with that should go the higher qualities of civilization that spring from character, particularly on its Spartan side, which as history in the past proves, can be all too easily sapped by the allurements that prosperity yields, and against which the simplicity of a humbler standard of life is often a safeguard."—*The Right Hon'ble John Burns.*

# கைவேலை செய்துழைத்து கனம்பொருந்திய மந்திரி ஸ்தானத்துக்கு வந்திருக்கும் ஜான் பர்ன்ஸ்.

"இஷ்டவிருத்தி"—"ஈசனருள்."

மகாகனம்பொருந்திய ஜான்பர்ன்ஸ் என்பவர் இப்பொழுதுள்ள லிபரல் கவர்ன்மெண்டில் "லோகல் கவர்ன்மெண்ட் போர்டுக்கு ப்ரெஸிடெண்டாக"விருக்கும் மந்திரிவேலை வகித்திருக்கிறார். இவருடைய சரித்திரம் சிந்திக்கப் பயன்தரும் ரஸம் பொருந்தியதாயிருக்கிறது. இவர் மிகவும் ஏழை வம்சத்தில் பிறந்து 10-வயதிலே தன் ஜீவனத்துக்காகத் தானே யுழைக்கும்படி நேரிட்டது. முதல் முதல் மெழுகுவர்த்தி செய்யும் ஒரு வேலைச்சாலையில் கூலி வேலைக்கமர்ந்துழைத்தார். பிறகு ஆபீஸில் சில்லரைச் சேவகத்திலமர்ந்தார். பிறகு இரும்பு வேலைக்கிடங்கில் பட்டந்தைக்கும் பையனாக வேலைசெய்து பிழைத்தார். இவ்வளவுழைத்தும் இப்பையனுடைய வருமானம் இவனுடைய சொற்ப ஜீவனத்துக்குப் போதாமையால் ஞாயிற்றுக்கிழமை தினம் சாராயக்கடையில் கூலிவேலைசெய்து வந்த லாபத்தைக்கொண்டு பிழைத்தார். இப்படி கஷ்டப்பட்டு ஜீவனம் செய்துவந்த பையன், ஒரு அணுவுக்கு ஒரு பழம்புஸ்தகம் வாங்கி வாசித்தார். அது ஸ்வீடன் தேசத்து 12-வது சார்ல்ஸ் அவர்களின் சரித்திரம். இந்த மன்னர் தேகவன்மை பொருந்தி தேகத்தை நன்றாகப்பழக்கி மனதுக்கிசைந்து நடக்கும்படி செய்துவந்த மஹாதீரர். இவருடைய சரித்திரத்தை வாசித்த ஜான் பர்ன்ஸ் என்னும் வாலிபனுக்கு இவரைப்போல் தானும், பசிதாகம், சீதோஷ்ணம் இவைகளையெல்லாம் சகிக்கத்தக்கதாகத் தன் தேகத்தைப் பழக்கிப் பதமிட்டு எஃகுபோல் வணங்கி வரச்செய்து கொள்வதோடு, மனதுக்குட்பட்டு மனோவசப்பட்ட தேகமாகவிருக்கும்படி தன் தேகத்தைப் பழக்கிக்கொள்ளவேண்டுமென்று ஆசையுண்டாயிற்று. உண்டாகவே, பனியில் நனைந்து வெயிலில் காய்ந்து; ஆகாரங்களில் சொகுஸு பாராமல் கிடைத்ததைப்புசித்துப், புசித்ததை நன்றாக ஜீரணிக்கச் செய்யும்படியான வன்மைபொருந்தியதாய்ச் செய்துகொண்டார். இதனால் இச்சிறுவன் எவ்வளவோ ஜீவனோபாயத்துக்காகக் கஷ்டப்பட்டுழைக்க வேண்டியிருந்தும் அந்த தேககஷ்டங்களையெல்லாம் லக்ஷியம் செய்யாது தன் மனதையும் விர்த்திசெய்து கொள்ளவேண்டி அபாரசிரமம் வகித்துழைக்கத் தீர்மானிக்கவும், தீர்மானித்தபடி நடக்கவும் சாத்தியமாயிருந்தது. இப்படி ஜீவனத்துக்குழைத்துக் கூலிவேலை வாங்கி ஜீவனம் செய்து வருகையிலும் வேலைசெய்து வருந்தியிளைத்தபின் இளைப்பினால் களைமீறுது தன்தேகத்தை மனோசக்தியால் திடப்படுத்திக்கொண்டு, மேன்மேலும் அனேக புஸ்தகங்களை வாசித்து வருகையில், இவர் 'ஜனசாமான்னிய தர்மம்' என்று சொல்லும் எல்லா ஜனங்களும் ஈசுவரனுக்கு சமமானதால், ஈசுவர சிருஷ்டியாம் ஜகத்திலுள்ள சுகபோகங்களை எல்லாரும் சமமாக அனுபவிக்கப் பாத்தியப்பட்டவர்களாக விருக்கிறார்கள்

என்கிற "ஸோஷியாலிஸ்ம்" என்று சொல்லும் ஜனசாமான்னிய தர்மத்தை யனுசரித்துழைக்கும் ஒரு கக்ஷியார் அபிப்பிராயங்களை யனுசரித்து அவர்கள் கொள்கைகளை யங்கீகரித்தனுஷ்டிப்பவரானார். இவர்களுடைய பிரதமக் கொள்கை யென்னவென்றால், ஜகம் எல்லாருக்கும் பொது : ஜீவன்களெல்லாரும் சமமாக ஜீவித்து சுகித்திருக்க பாத்தியப்பட்டவர்களாயிருக்கிறார்கள். ஏழை தனவந்தன் என்கிற வித்தியாசங்கள் மனுஷன் தானாக ஏற்படுத்தினவேயன்றி இயற்கை தர்மத்தில் அவை ஏற்படவில்லை யென்பதே. இதற்கு மாறாகவுள்ள சட்டதிட்ட துரைத்தன ஏற்பாடுகளையெல்லாம் இதற்கு அனுகுணமாகத் திருத்தவேண்டுமென்பது இவர்கள் கோறிக்கை. இதற்காக இவர்கள் கங்கணங்கட்டி யுழைத்துவந்தார்கள். இப்படி உழைத்து வந்தவர்களில் சிரேஷ்டர்களாயுள்ளவர்கள் தர்மங்களையாராய்ந்து அனுஷ்டிக்கத் தலைப்பட்டபொழுது "இவ்வுலகெலாம் எனக்கு ஸ்வதேசம், நலஞ்செயல் ஒன்றே உண்மையாய் நான் கொண்டாடும் மதம்" என்று மிஸ்டர் டாம்பெயின் என்பவர் சொல்லிவந்த ஸத்ய வாக்கியம் இவர் மனதைக்கவர்ந்து இவரை அவ்வழியில் நடக்கச்செய்தது. இந்த உண்மையையே, இன்னும் தூக்கி நமது வேதங்கள் "ஸத்யம்வத: தர்மம்சர!" என்று கோஷிக்கின்றன.

இப்படி சிறுகச் சிறுக சாமான்ய ஜனங்களின் க்ஷேமத்தை நாடி தனதனவந்தர்கள் செய்யும் அக்கிரமத்தை யடக்க வுழைக்கும் உத்தமர்களில் இவர் ஒருவராக முன்னுக்கு வரத் தலைப்பட்டார். அப்பொழுது ஜனங்களைக்கூட்டி அவர்களுக்கு ஹிதபோதம் சொல்லி அக்கிரமங்களை யெதிர்த்துப் பேசிவரும்போது போலீஸ் அதிகாரிகள் இவர்களைக் "கலகக்காரர்கள்" என்று பிடித்துக் காவல்படுத்தி போலீஸ் கோர்ட்டில் கொண்டுபோய் தண்டித்து வந்தார்கள். இப்படி எத்தனையோதரம் போலீஸாரோடு மன்றாடி, ஒருமுறை ஜயிலிலும்கூடப் போயிருந்து வந்தார். லண்டனிலுள்ள "ஹைட்பார்க்" என்னும் பொதுத்தோட்டத்தில் இவர் பிரசங்கம்செய்து வந்தபொழுது போலீஸார் இவரைப்பிடித்திழுத்துச்சிறைப்படுத்தி முரட்டுத்தனமாகக் கோர்ட்டுக்கிழுத்துச் சென்றார்கள். அப்பொழுது இவருடைய மேன்மையையும் தைரியத்தையும் பார்த்து ஆச்சரியப்பட்டு பிரமித்து நின்ற மிஸ் சார்லோட்டி கேல் என்னும் ஒரு இளமாது இப்படிப்பட்ட தீரனை மணந்து இவனுக்குப் பக்கபலமாயிருந்துதவவேண்டுமென்று மனசில் தீர்மானித்துக்கொண்டு காத்திருந்தாள். ஜெயிலைவிட்டு வந்ததும் அப்பெண்ணரசி அவர் பெருமையையும் தீரத்தையும் கொண்டாடித் தன்னை அவருடைய வாழ்க்கைத் துணையாக அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளத் துணிந்தாள். அந்தப் பெண்மணி, இப்பொழுது அவருடைய மனதுக்கிசைந்த மனைவியும் கருத்துக்கிசைந்த தலைவியுமாகவிருந்து அவருக்கு உற்றதோர் வாழ்க்கைத்துணையாயிருந்து அவருடைய இல்லறம் சிறக்கச்செய்து வருகிறார். அவர் முன்னுக்கு வந்து சிறப்பெய்தி அவருடைய உதவியினாலேயே யென்று அவரே ஒப்புக்கொள்கிறார். யது அந்த அம்மாளுடைய

மிஸ்டர் ஜான் பர்ன்ஸ் விவாகமாகுமுன் தென்னாபிரிகாவில் இஞ்சினீராக வேலை செய்துவந்தார். அங்கே பேரும் கீர்த்தியும் பெற்று இங்கிலாந்துக்குத் திரும்பிவந்து "சௌன்டி கௌன்ஸில்" மெம்பராக ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பட்டு, ஏழைகளில் ஏழையாய் ஏழைகளுக்குதவியாய் வெகுபாடுபட்டுழைத்து வந்தார். 1886-ம் வருஷத்தில், மறுபடியும் அதிகாரிகளுக்கும் ஜனங்களுக்குமுண்டான சச்சரவில் இவர் சிறைப்பிடித்து

3-மாசம் காவலிலிடப்பட்டார். ஆனாலும் இவர் ஒன்றுக்கும் அஞ்சாது பொதுவிஷயத்தில் மனம் களித்து பொதுக்ஷேமமே பெரிதாகவுழைத்துவந்தார். இவர் "கௌன்டி கௌன்ஸில்" மெம்பராக வந்தபின், இவருடைய டிஸ்திரிக்ட்டில் ஏழைகளுக்கு வேண்டியவுதவிசெய்துழைப்பதில் அதிக சிரத்தையெடுத்து வந்தார். இவர் ஏழைக்கெளியவர் என்றும் ஏழைபங்காளியென்றும் ஜனங்கள் இவரைக் கொண்டாடி வந்தார்கள். பிறகு பார்லிமெந்து சபையில் மெம்பராக வந்து பல வருஷங்கள் அம்மகா சபையில் தன்னுடைய சாமர்த்தியத்தைக் காட்டி ஏழைகளுக்குச் சகாயமாக வுழைத்துவந்ததில், இவரைப்போல் கைவேலை செய்து உழைத்து முன்னுக்குவந்த அனேகர் இப்பொழுது பார்லிமெந்து சபையில் மெம்பர்களாக வர ஏற்பட்டு, இவர்கள் கக்ஷி பலப்படலாயிற்று. பலப்படவும் அக்கக்ஷிக்கெல்லாம் தலைவராய் விளங்கிய இவர் புதிதாய் ஏற்பட்ட லிபரல் கவர்ன்மெண்டில் ஸ்தானிகசுயஆக்ஷித் தலைவராக மந்திராலோசனை சபையில் முதல்மந்திரி முதலானவர்களோடு கூடவிருந்து ஆலோசனை சொல்லும் அந்தஸ்துப் பெற்றிருக்கிறார். இந்தப் பதவிக்கு வருமுன்னமே, மாக்ஷிமைதங்கிய நமது அரசர், இவரைத் தமது சொந்த ஆலோசனை சபையில் (Privy Council) ஒரு மெம்பராகவிருக்க நியமித்துவந்தார். கைவேலை செய்துழைத்து கனம்பொருந்திய மந்திரிஸ்தானத்துக்கு வந்த இவர், ஏதோ காட்டாள், மோட்டாளாகவில்லாமல், ஸர்வகலாசாலையில் படித்துத் தேறிப் பரம்பரையாக இராஜதுரந்தரர்களாயிருந்த பிரபுக்கள் பிரமுகர்கள் வம்சத்தில் பிறந்த பிரபுக்கள் வித்துவான்களுக்குச் சரியாக அந்தஸ்துவகித்து ஆலோசனை சொல்வதன்னியில், இவருடைய கொள்கைகளும் அபிப்பிராயங்களும் மூலதத்துவங்களை யொட்டினவைகளாகவும், இரண்டு சொல்ல சாத்தியமில்லாதனவாகவுமிருக்கின்றன. உதாரணமாக, ஜனக்ஷேம விர்த்தியைப்பற்றி இவர் ஆதிமுதல் கொண்டிருந்து இப்பொழுது பின்னும் அதை வற்புறுத்திக் கூறின கொள்கை மிகவும் மேலாகவும் உத்தமமாகவுமிருப்பது பின்வரும் அவர் அபிப்பிராயத்தால் விளங்கும். அவர் சொல்கிறார்:—

"மனுஷன் விர்த்திக்குவர முனிசிபாலிடிகளாலும் சர்க்காராலும் தனதான்ய சுகசம்பத்துக்கள் விர்த்தியாகமட்டும் செய்தால் போதாது என்பது ஆதிமுதல் நான் கொண்ட கொள்கையாயிருக்கிறது. இன்றைக்கும் அதை மாற்றாமல் நாளைக்கும் அதுவே உண்மையாகக் கொள்ளத்தக்கது என்று கொண்டிருக்கிறேன். மனிதர்கள் சந்தர்ப்ப வசப்பட்டவர்களாயிருக்கிறார்கள். அப்பிடிக்கின்றி சந்தர்ப்பங்கள் மனிதர் வசப்பட்டனவாகவும் அவர்கள் லீலா விநோதமாக உபயோகிக்கத்தக்கனவாகவுமிருக்க வேண்டியது கிரமம். மனுஷன் பிரத்தியேகத்தில் காமமோஹாதிதாபங்களை யடக்கி யுக்தானுசாரமாய் அவைகளையனுபவிக்கப் பழக்கவேண்டியதவசியமாயிருப்பதுபோலவே, பொதுக்ஷேமத்திலும் முனிசிபாலிடிகள் மூலமாகவும் சர்க்கார் உதவியினாலும், ஜனக்ஷேமத்துக்கடுத்த சாதன சாதகங்களை விர்த்திசெய்து வருகையில், ஜனங்கள் தாமே தங்கள் சொந்த முயற்சியாலும் இஷ்டப்பிரயத்தனத்தாலும், சத்குணசம்பத்தாலும், கர்மபலத்தியாகத்தாலும், தன்னடக்கத்தாலும் முன்னுக்கு வர முயற்சித்துழைக்கும்படி செய்யவேண்டியது அத்யாவசியமாயிருக்கிறது—அதாவது அதிசார வரம்பும், உத்தியோகஸ்தர் கட்டுப்பாடும், குறைந்துவர, எங்கும் ஜனங்கள் தன்முயற்சியால் முன்னுக்குவர உதாரணங்காட்டி யுழைப்பவர்களாகவிருக்கவேண்டும். நாம் (ஆங்கிலேயர்) ஸ்வதந்தர புருஷர்கள்; ஆகையால் ஜனங்கள் தன்னிச்சையாலும், தன்முயற்சியா-

னர், ஸ்வசங்கல்பத்தாலும் (அனேக இக்கட்டுகளுக்குட்பட்டுழைக்கவேண்டியிருப்பினும்) எவ்வளவோ முன்னுக்குவரலாமென்பதையுணர உணர்த்தவேண்டும். பஹிர்முகசுகத்தையே நாடி ஜீவவிருத்தி யொன்றிலே மனமூன்றி சட்டதிட்ட கட்டுப்பாடுகளெல்லாம் அதற்கனுகூலமாக அமைந்து ஸ்வசிந்தையும் ஸ்வமுயற்சியும் அதிகமாக வேண்டியிராமல்,யந்திரம் போல்நடந்துவரும் இராஜாங்க ஏற்பாடு அமையப்பெற்ற ஜனசமூகத்தைவிட, ஸ்வசிந்தையும் ஸ்வமுயற்சியும்பொருந்திய ஸ்வதந்திர ஜனங்களமைந்த ஜனசமூகம் சீக்கிரத்தில் மேன்மையடைந்து முன்னுக்குவரக் காரணமாகும். மனுஷன் வயிறு வளர்க்கவென்றே பிறந்தவனல்ல, வயிற்றுப்பாட்டோடு அவன் புத்திசித்தம் விர்த்திபடைத்து அறிவு விர்த்தியடையப் பாடுபட்டுழைப்பது மிகவும் அவசியமாயிருக்கிறது. உண்டு கொழுத்த காளைகள் நிறைந்த ஜனசமூகம் மேலானதல்ல. அஹம்விருத்தி, பரசேவை இவைகளால் ஸ்வாத்ம விருத்தியும் ஸ்வக்ஷேமநாட்டமும் பொருந்திய மனிதர்கள் இருக்கும் ஜனசமூகமே விர்த்தியடைந்து முன்னுக்கு வருமென்பது என்னுடைய சித்தாந்தம். ஆகையால் ஐசுவரிய விர்த்தியால் உண்டுடுத்துறங்கி சுகித்து மிருகப்பிராயமாய் வளரும் ஜனங்களைவிட, கஷ்டஜீவனம்செய்து, இஷ்டவிருத்தியை நாடும் ஜனங்கள் மிகுந்திருப்பதே நாட்டுக்கு நன்மைபயப்பதாம்" என்று அவர் தம் அபிப்பிராயத்தைக் கூறியிருக்கிறார். இஷ்டவிருத்தியென்றால் "கண்டதே காட்சி கொண்டதே கோல"மென்று திரிவதில்லை. திருமூலர் திருமந்திரோபதேசத்தில் திருவாய்மலர்ந்தருளியபடி "இஷ்டவிருத்தி" முதிர்ந்தால் அதுவே "ஈசனருளு"மாம்.

"கொட்டுக்குந்தாலியிரண்டேயிரண்டுக்குங்
கொட்டுக்குந்தாலிக்கும்பாரைவலிதென்பர்
கொட்டுக்குந்தாலிக்கும்பாரைக்குமூன்றுக்கும்
மிஷ்டம்வலிதென்பரீசனருளே."

---

## PSYCHIC CURE—A TALE OF THE TIMES.

## ஆத்ம வைத்தியம்—ஒரு உண்மையான கதை.

*(By Sri Balasundarum)*

"தாயேநீவாலைதயவுடைசுந்தரீ
நாயேனை மாலையமுடன்கூடியே
வாயேனுனக்குள்அவமியாதென்னென்று
மாயேநீமறைந்துபின்காலைவந்தோதினை."

"யாரங்கே? கதவை இடிக்கிறது?"

"நான்தான்! கதவைத் திறவுங்கள்."

"அந்த 'நான்தான்' யார்தெரியவேண்டும்."

"அதுதான் நான் என்கிறேனே!"

"அந்த அகங்காரப்பேய்தான் யார் என்று கேட்கிறேன்."

"இங்கே பேயுமில்லை, பிசாசுமில்லை! கதவைத் திறக்கவேண்டும்."

"பேர் சொன்னால் தான் கதவு திறக்கும்."

"தன்பேரைத் தானே சொல்லலாமா?"

"பேர், ஊர் தெரியாமல் உள்ளே விடலாமா?"

"அப்பா, உங்கள் தகப்பனார் இல்லையோ?"

"இருக்கிறார்! பேர் சொன்னால்தான் இனி பதில் சொல்வேன்!"

"இதேதடா இது! சங்கடமாயிருக்கிறது!"

"சங்கடமாயிருந்தால் இருக்கட்டும்! பாதகமில்லை."

"அவசர காரியமாக அசலூரிலிருந்து ஒருவர் வந்திருக்கிறார் என்று சொல் அப்பா!"

"எந்த ஊரிலிருந்து யார் வந்திருக்கிறாரென்று சொன்னால்தான் மேல் பேசுவேன்."

"நான்தான் சாஸ்திரிகள்."

"சாஸ்திரிகள் என்றால்! பேர் என்ன?"

(தனக்குள்) "அடபாவமே! இவன் விடமாட்டான் போலிருக்கிறது!" (உறக்க) "நான்தான் குப்பா சாஸ்திரி."

"எந்த ஊர்?"

"பேர் சொன்னால் உங்கப்பாவுக்குத் தெரியும்."

"அதெல்லாமில்லை; ஊரும் சொல்லவேண்டும்."

"குக்குடபுரம் குப்பா சாஸ்திரிகள் வந்திருக்கிறார்: அவசரமாகப் பார்க்கவேண்டுமென்கிறாரென்று சொல்."

"இதற்கு எத்தனை நாழிகை! இத்தனை கேள்வியா? இதற்குள் ஒரு கேஸ் விசாரணை செய்து முடிந்தாயிருக்குமே!"

(தனக்குள்) "இங்கிலீஷ் படித்த பிள்ளைகள் இப்படித்தான் ஒன்றிருக்க ஒன்று நினைத்து வில்லங்கம் விளைக்கிறதுகள்! தன்பேரைத்தானே சொல்லக்கூடாதென்கிற சாஸ்திர சம்பிரதாயம் அறியாமல் இப்படி விஷமவார்த்தைகள் பேசினால் என்ன செய்கிறது!"

கதவைத் திறக்கவந்த பையன் இதைக்கேட்டு, "பேரூர் சொல்லாமல் அகால வேளையில் பிசாசாட்டமாக வந்து கதவையிடித்தால் என்ன செய்கிறது!" என்று தனக்குள் சொல்லிக்கொண்டு கதவைத் திறந்தான்.

கதவைத்திறக்கவும் சாஸ்திரிகள் உள்ளே புகப், பிள்ளையாண்டான் இங்கிலீஷ் தோரணைப்படி சாஸ்திரிகளை உபசரித்தழைத்து உள்ளேயிட்டுக்கொண்டுபோய் நாற்காலி கொடுத்து உட்காரச் சொன்னான்.

சாஸ்திரிகள் தான் உட்காரக்காட்டின நாற்காலியைத் திரும்பியும் பார்க்காமல் முற்றத்திலிறங்கி நின்றுகொண்டு "காலலம்பக் கொஞ்சம் ஜலம் கொடுத்தால் உபகாரமாயிருக்கும்" என்றார்.

பிள்ளையாண்டான் இங்கிலீஷ் படித்துத் தேறினவனாதலால் அதிதிகளுக்கு அர்க்கிய பாத்திய ஆசமனீய உபசாரங்கள் செய்கிற பூர்வ சம்பிரதாயத்தை மறந்தே போய்விட்டான். இளம்பிராயத்தில் அவன் தகப்பனார் பூர்வீக சம்பிரதாயங்களைப் பரம்பரை வழக்கமாக அப்பியசித்து வரவேண்டுமென்று பன்முறை பன்னப்பன்னிச் சொல்லிப் போதித்து வந்தாராயினும், பட்டணம்போய் பி. ஏ. பரீக்ஷை கொடுக்கும் வரையில் படித்த பையன் அதையெல்லாம் அடியோடு மறந்துவிட்டான். சாஸ்திரிகள் வாய்விட்டுக் கேட்கவே பூர்வசம்பிரதாயம் ஞாபகத்துக்கு வர அவருக்கு வேண்டியபடி வேதோக்த உபசாரங்களெல்லாம் செய்தான்.

குக்குடபுரம் குப்பாசாஸ்திரியார் தான் பிறந்து வளர்ந்து அத்தியயனம் செய்த ஊரில் வைதீகப் பிழைப்புக்கு வழியின்றிப்போக, அந்தப் பக்கங்களிலிருந்து பட்டணம் வந்து படித்து பெரிய வேலைகளிலமர்ந்து கனமும் தனமும் மிகுந்த "பெரிய மனுஷர்கள்" சிலரையடுத்து அவர்களுக்கு உபாத்தியாயத்துக்குத் 'தக்கவைதீகர்கள்' கிடைப்பதருமையாயிருப்பதைக்கேட்டு ஒரு பெரியமனுஷர் வீட்டுக்குக் குடும்பப் புரோகிதராக (வாத்தியாராக) ப்பட்டணம் வந்து சேர்ந்தார்.

வாத்தியார் பட்டணம்வந்த புதிதில் புரோகிதவேலை பூராவாகவில்லையால் கனம்பொருந்திய கனகசபேசர் வீட்டில்தானே சாப்பிட்டுக்கொண்டு புரோகிதத்தொழிலோடு கடைக்குப்போய் காய்கறி வாங்கி வருதல், உக்கிராண விசாரணை முதலிய கிருக கிருத்திய காரியங்களை வீட்டு எஜமானிக்குட்பட்டு மேற்போட்டு நடத்திவந்தார். குடும்பப்புரோகிதரும் வீட்டுக்காரியபாரியுமாகிய குக்குடபுரம் குப்பாசாஸ்திரியாருடைய யோக்கியதையும் வைதீகசாமர்த்தியமும் மற்றுமுள்ள பெரிய குடும்பங்களுக்குத் தெரியவரவே, அந்தந்த வீட்டு எஜமானிகளின் சிபாரிசின்பேரில் இவர் நாலைந்து பெரியமனுஷாள் குடும்பத்துக்குப் புரோகிதராகும் பாக்கியம்

பெற்றார். பட்டணவாசங்களில் யோக்கியதையுள்ள வைதீகப் பிராமணர்கள் கிடைப்பது அருமையாதலால் பெரிய மனுஷர்கள் தங்களையடுத்துவந்த வைதிகர்களை விசேஷ சம்பாவனைகள் கொடுத்து ஆதரித்துக் கைதூக்கிவிடுவது வழக்கம். குப்பாசாஸ்திரியார் கௌன்ஸில்மெம்பர் கனம்பொருந்திய கனகசபேசய்யர் வீட்டில் சிலகாலம் நெருங்கிப்பழகின விசேஷத்தாலும், குக்குடபுரத்திலிருக்கையில் "கனம்" வரையில் அத்தியயனம் பண்ணின விசேஷத்தாலும் வைதிகத்திற்போல் லௌகிகத்திலும் தேர்ந்தவரானார். பெரிய மனுஷர்கள் வீட்டில் புரோகிதவேலை பார்த்தல் மஹா கஷ்டம். இங்கிலீஷ் படிப்பினால் வேதத்துக்கும் வேதமந்திரங்களுக்கும் முன்போல் மகிமையின்றி ஏதோ ஸ்திரீகளின் பரம்பரையான பக்திசிரத்தை முதலிய சத்குணங்களுக்கு ஹானிவரக்கூடாது என்கிற நோக்கத்தால் அவர்களைச் சந்துஷ்டிப்பிக்கும் பொருட்டு வேதகர்மங்கள் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றனவேயன்றி, அதிகாரிக்கு அதில் பக்தி சிரத்தை கிடையாது.

சூரியன், சோமன், இந்திரன், அக்னிமுதலாகிய தேவதைகளுடைய ஸ்தானத்தை கௌன்ஸில், கோர்ட்டு, கச்சேரி, ரயில் முதலிய தற்கால நாகரிக தேவதைகள் வகித்துக்கொண்டுவிட்டபடியால், முற்கண்ட தேவதைகளுக்குத் திருப்தியாக நமது முன்னோர்கள் ஏற்படுத்திய வேதமந்திரங்களை இக்காலத்திற்குத் தக்கபடி பிற்கண்ட தேவதைகளைத் திருப்திசெய்யும்படி தந்திரமாய் மாற்றி உபயோகிக்கவேண்டும். உள்ளபடி உச்சிகாலத்தில் செய்யவேண்டிய கர்மங்களை, இந்த நவீன தேவதைகளுக்குத் திருப்தியுண்டாகும்படி உதயகாலத்தில் செய்துவைக்க வேண்டியதோடுகூட, அதற்கு நியாயமும் தர்மசாஸ்திர சம்மதமும்கூட ஆராய்ந்துபார்த்து, ஐயரவாள் சப்ஸ்கிருதம் வாசித்திருக்கிற செருக்கில் நியாயஞ்சொல்லி ஆதாரம் கூறச்சொன்னால் உடனே கூற சித்தமாக விருக்கவேண்டும். சாஸ்திர வசனங்களின் கூடார்த்தத்தைக் கிரகித்து ஆத்மார்த்தமாக விசாரணை செய்ய ஐயரவாளுக்கு அவகாசமாவது அபீஷ்டமாவதில்லையாதலால், வாத்தியார் சுத்த சுண்டைக்காயனுயின்றி, சற்று தர்மசாஸ்திரங்களைப் படித்து வகதேசம் சிறிது விசாரணையும் செய்தவராயிருந்தால், வேதமந்திரங்களையெப்படித் திருப்பினாலும் திருப்ப இடங்கொடுக்குமாகையால், சிலசாஸ்திர வசனங்களைக்கொண்டு, வைத்தியனாதீய கிரந்தத்தின் உதவியால் ஐயரவாளைப் பூரண திருப்திசெய்வதன்றி, தம் வாத்தியாருடைய சாமர்த்தியத்தைப்பற்றி ஐயரவாள் மனம்பூரித்துப்போகும்படியும் செய்துவிடலாம். இதுவரையில் அம்மாளுடைய தயவையே எதிர்பார்த்துக்கொண்டிருந்த வாத்தியாருக்கு இவ்விதமாக ஐயரவாளுடைய கிருபாகடாக்ஷமும் கிடைத்துவிட்டால் அப்புறம் அவருக்குக் குறைவு ஒன்றுமில்லை. வாத்தியார் யோகமே யோகம். ஐயரவாள் "கௌன்ஸில் மீட்டிங்கில்" இருந்து ஊருக்கெல்லாம் சட்டம்செய்ய உதவிபுரிந்தால், சாஸ்திரியார் தேவிசகாயத்தால் ஐயரவாளுக்கும் அவர் குடும்பத்துக்கும் சட்டஞ்செய்ய உதவிபுரியத் தக்கவராவார். இதுவரையில் வாத்தியாரை ஒருவித ஈவிரக்கத்தோடு ஆதரித்து வந்த அம்மாள், இப்பொழுது அவருடைய சாஸ்திரஞானத்துக்கும் மந்திரசக்திக்கும் ஒருவாறு அஞ்சி அவரை உள்ளபடி குரு ஸ்தானத்தில் வைத்து ஆதரித்துவர எண்ணுவார். தனக்கு குருபீடம் கிடைக்கவும், வாத்தியாரும் ஐயரிடத்தில் எவ்வளவு அடக்க ஒடுக்க மரியாதையோடு நடந்துகொள்கிறாரோ அவ்வளவு ஹட திட ஆர்ப்பாடத்தோடு அம்மாளிடத்தில் தன் கௌரவாதிபத்தியத்தை (குரு அதிகாரத்தை) க்காட்டுவார். இந்த நிலைகிடைத்து ஒரு பெரியமனுஷாளைப்போல் நாலு பெரியமனுஷாள் வீட்டுப்புரோஹிதமும் அமர்ந்துவிட்டால் வாத்தியாருக்கு வியாழ பகவான் திசை நன்றாகவந்துவிட்டது என்று சொல்லலாம். வாத்தியார் முன்போல் சோற்றைத் தின்றுகொண்டு உக்கிராண காரியங்கள் பார்த்துக்கொண்டிருக்க முடியாது. தர்மபத்தி கூடவில்லாமல் வேதகர்மங்கள் எவ்வளவோ தடைப்பட்டுப்போவதால், இனி பத்நிசமேதராய் இருந்தால் இங்கேயிருக்கலாமேயன்றி முன்போலிருக்க சாத்தியமில்லை. இந்த அற்பகாரணத்துக்காகவும் சொற்பப் பிழைப்புக்காகவும் ஒரு பிராம்மணன் எத்தனைகாலம் தன் வேதகர்மங்களை விட்டுத் துறந்து வேதப்பிரஷ்டனாக விருக்கலாம்? வாத்தியாருக்கு விட்டுப்போன அக்னிஹோ

த்திரத்தைத் தொட்டுப்பிடித்துப் பரிகாரத்தோடு செய்த மேல்யஜ்ஞங்களும் செய்து தீக்ஷை வாங்கிக்கொள்ள வேண்டுமென்று ஈசுவராஜ்ஞை அசரீரியாகப் பிறந்து மனதில் தோன்றிவிட்டது. பட்டணம் வந்து வேதப்பிரதிஷ்டனாகவிருந்த கோஷம்போக ஊருக்குப்போய் யாகயஜ்ஞங்கள்செய்து தீக்ஷை பெற்றுக்கொண்டு பத்நிசமேதராய்வந்து சிஷ்யவர்க்கங்களின் க்ஷேமத்திற்காகப் பட்டணத்திலே வாசஞ்செய்யவேண்டுமென்கிற காருண்ய சங்கற்பம் உதிக்கவும், அம்மாமார்கள் சிபார்சினாலும் ஐயரவாள்கள் அனுகூலத்தினாலும் யாகயஜ்ஞங்கள் செய்து தீக்ஷைபெற்றுக் கொள்ளுங்காலமும் அதையொட்டித் தானே கிட்டிவிடுகிறது.

பட்டணத்திற்கு பச்சைப்புழு ஸ்திதியில் வந்த வைதீகன் லௌகீகக்குளவிகள் கூட்டில்தங்கிக் கொட்டுண்டு, பச்சைப்புழு நிலைமையிலிருந்து கொட்டுக்குளவியாகமாறும் தீக்ஷா விசேஷத்தை ஒருவாறு அரையுங் குறையுமாகப் பொதுவில் சொன்னோம். குக்குடபுரம் குப்பாசாஸ்திரிகள் குட்டிசாஸ்திரியாய் வந்து கொட்டுக்குளவியாம் தீக்ஷதர் நிலைக்கு வரும்படியாயிருந்த இனிமையான சந்தர்ப்பத்தில் திடீரென்று தூரதேசத்துக்குத் தூதுபோகும்படியான ஒரு அபூர்வ சந்தர்ப்பம் நேரிட்டது.

அந்த சந்தர்ப்பத்தை யொட்டியே அவர் வண்டியிலும் ரயிலிலுமாக வெகுதூரம் பிரயாணம் செய்து, காடு மலைகளெல்லாம் கால்நடையாகக் கடந்து பொதியமலையடிவாரத்திலுள்ள பாபவிநாசத்துக்கருகிலுள்ள "அகஸ்தியர்புரம்"என்னும் ஊருக்கு அர்த்தராத்திரியில் வந்து சேர்ந்து, முதற்சாமம் எப்போ விடியப்போகிறதென்று காத்துக்கொண்டிருந்து, விடிய ஜாமத்துக்கே குளிரையும் பார்க்காமல், அவ்வூருக்குச் சமீபத்திலோடிய புண்ணியதீர்த்தமாம் ஒரு மலையருவியில் தன் பாபவினைகளோடு தேகசிரமமும் தீர ஸ்நானம் செய்து சந்தி ஜபங்களை முடித்துக்கொண்டு தலையில் ஈரவேஷ்டி மடிசஞ்சியும் கையில் தீர்த்தபாத்திரம் ஸ்காலிச்சொம்பும் திலங்க அகஸ்தியர்புரம் சோதிமதி அய்யர் வீட்டைத் தேடிப்பிடித்து ஆவல் பொறுக்காமல் "திடும், திடும்" என்று கதவையிடித்தார். அப்பொழுது முன் கட்டிலிருந்த சோதிமதிஐயர் குமாரன் ஓதுமதிநாதன், பி. ஏ. வரையில்படித்துக் கோடைராஜாவுக்காக கிராமத்துக்கு வந்திருந்தவன், இங்கிலீஷ் மோஸ்தர்ப்படி பேர் ஊர் சொல்லாமல் பரிச்சயம் தேடுகிறவன் பரிச்சய யோக்கியதை குறைந்தவனென்கிற தன் அந்தர் எண்ணத்தைக்கொண்டு சாஸ்திரிகளைத் தெருவாசலில் நிறுத்தி மட்டையடி அடித்து, மண்டகப்படிசெய்து உள்ளே விட்டான்.

* * *

சாஸ்திரிகள் வந்திருக்கிற செய்தியறிந்து, பூஜாக்ரகத்தில் அர்த்தஜாம பூஜை செய்து அதுமுதல் அப்படியே நிஷ்டையிலிருந்த சோதிமதி ஐயர், நிஷ்டை கலைந்ததும், வெளியே வந்து சாஸ்திரிகளை ஆசார உபசாரமாக வந்தித்தழைத்து யோகக்ஷேமங்களைப்பற்றி விசாரிக்கலானார். சோதிமதி ஐயர் அந்தரங்கத்தில் ஆத்மபூஜையும் பஹிர்முகத்தில் உபாசனமுறையுமனுசரிப்பவராயினும் வெளிக்கு லௌகிக வேஷத்தோடு லௌகிக தர்மத்தையனுசரிப்பவராகவே காட்டிவருவதன்றி தன்னுடைய அந்தர்பாவத்தை யாருமறியக் காட்டுவதில்லை. இவருக்கு ஒரு பெரியவர் அனுக்ரகம் கிடைத்தது முதல் உபாஸனை பலம் அதிகமாகி, ஜனோபகாரம் செய்து அருள்நிலை பெறவேண்டுமென்கிற எண்ணம் உதிக்கலாயிற்று. சம்ஸ்கிருதத்தில் ஏதோ கொஞ்சம் விசாரம் செய்தவராதலாலும், இங்கிலீஷ் படித்து முன்னுக்குவந்தவர்கள் சிநேக விசேஷத்தாலும், பூர்வ சம்பிரதாயம் நவீன சம்பிரதாயம் இரண்டையும் ஆய்ந்துணர்ந்து உலகுக்கொப்ப உண்மையையனுசரிப்பதில் சாமார்த்தியம் பெற்று விளங்கினார்.

குக்குடபுரம் குப்பாசாஸ்திரிக்கு இவருடைய சிநேகம் கிடைக்கவும் இவரிடத்திலுள்ள விசேஷங்கள் ஒருவாறு தெரியவரலாயின. வாத்தியார் முறையில் பரிச்சயம் செய்துகொண்டு, சிநேக பாவத்தில் அவருண்மையை யுணர்ந்துகொண்டு, யாருமறியாமல் அந்தரங்கமாயுள்ள குரு - சிஷ்ய பாவத்தில் அவரிடத்திலுள்ள வித்தை விசேஷத்தை ஒருவாறு கிரகித்துணர யத்தனித்து வந்தார். இப்படியிருக்கையில் சோதிமதி ஐயர், ஏதோ சோதிடவிசாரம் செய்திருப்பதையுணர்ந்து, தான் பல பெரிய குடும்பங்களுக்குப் புரோஹிதம் வகிக்கும்படியானவராய்விட்டபடி

யால், ஜாதகம் பார்த்தல், சோதிடம் சொல்லல் முதலிய இவையும் சிறிது கற்றிருந்தால் தன் செல்வாக்கு அதிக விர்த்தியாகுமென்றுணர்ந்து சிறிது சோதிடவிசாரமும் செய்ய ஆரம்பித்தார். இப்படியாக அகஸ்தியர்புரம் சோதிபதி ஐயருக்கும் குக்குடபுரம் குப்பாசாஸ்திரிகளுக்கும் பரஸ்பரம் சிநேகபாவமும் அதையொட்டி நெருங்கிய இதர பாவங்களும் உறவும் உண்டாகலாயிற்று.

* * *

அகஸ்தியர்புரம் சோதிமதி ஐயரும் குக்குடபுரம் குப்பாசாஸ்திரிகளும் ஒருவரையொருவர் கண்டு குசலப்பிரசனம் செய்துகொண்டிருக்கையில், இதை வாசிப்பவர்கள் மெல்லென அவர்களைவிட்டு நழுவி நம்முடன் "மனோபாவம்" என்கிற புஷ்பகவிமானத்திலேறிச் சிறிதுநேரம் பட்டணம் வந்திருந்தால் அவர்களுக்குக் காட்டவேண்டிய காக்ஷிகள் சிலவற்றையும் காட்டிச் சொல்லவேண்டிய விஷயங்களையும் பிரத்தியக்ஷப்பிரமாணமாகவே யுணரும்படி சுட்டிக் காட்டுவோம்.

சாயங்கால வேளையில் சமுத்திரக்கரைக் காக்ஷியைப் பாருங்கள். ஆங்கிலேயர்கள், ஸ்திரீ புருஷர் சமேதராக (ஸ்வஸ்திரீயிலும் அந்நிய ஸ்திரீயாகவிருந்தால் சல்லாப சம்பாஷணை சந்தோஷம் ஜாஸ்தி) கையில் கைகோர்த்து ஆனந்தமாய்ப் பேசிக்கொண்டு போகிறார்கள். சிறுபிள்ளைகள் மணலில் ஓடி விளையாடுகிறார்கள். விடபுருஷர்களும் ஸ்திரீகளும் ஜலத்தின் ஓரத்தில் உட்கார்ந்துகொண்டு, சமுத்திர கோஷத்தில் தங்கள் சந்தோஷ சல்லாப சம்பாஷணை கோஷம் மூழ்க, அச்சம்விட்டு ஆனந்தமாய்ப் பேசி விளையாடிக்கொண்டிருக்கிறார்கள். நூதனமாகச் சாந்தியான இளமடந்தைகள், தங்கள் புருஷர் சொல்லுக்கு இரண்டு சொல்லமாட்டாமலும், அவர்களோடு வெளிப்புறப்படுவதினால் மேலெழும் லஜ்ஜையை அடக்கமாட்டாமலும், அவர்கள் நாயகர் பேரிலுள்ள ஆசையானது அவர்களை முன்னுக்கிழுக்க, லஜ்ஜை பின்னுக்கிழுக்க, இவ்விரண்டுக்கும் நடுவிலகப்பட்டவர்களாகத் தொங்கலாடிக்கொண்டு போவதை அவர்கள் நடை, யுடை, பாவனை, புன்முறுவல், நாணம், அச்சம், துணிவு எல்லாம் கூடிக் கொட்டிச் சிரித்துக் கேலிபண்ணுவதுபோல் அவர்களை வழியில் போகிறவர்களும் பார்த்ததிசயிக்கும்படிச் செய்வதைப் பாருங்கள். பட்டணத்திலேயே பிறந்து வளர்ந்து படித்துத்தேறிக் கூட்டங்களிலும் கும்பல்களிலும் கணிசமாய்ப் போய்வரப்பழகின இளமாதர்கள் சிலர் அச்சம்விட்டு உச்சித பாவனை முகத்தில் விளங்க ஒயிலாய்த் தங்கள் தந்தை, சகோதரர், கணவர் இவர்களுடன் நடைபழகுகிற அழகையும் பாருங்கள். இவர்களன்றி ரோட்டில் போகும் கோச்சு வண்டிகளிலிருந்துகொண்டு வண்டியைவிட்டுக் கீழிறங்காமல்தானே காற்றுவாங்கும் மாதரசிகள் பலரையும் பாருங்கள். அதோ அந்த அம்மாள் குலுங்க நகைபூண்டு நலுங்க வுடைதரித்து நாகரிகமாய் அந்த 'பீடனி'லுட்கார்ந்து சித்திரப் பதுமைபோல் காற்றுவாங்குவதைப் பாருங்கள். அதோ அந்த மூடுவண்டியில் இரண்டு சீமாட்டிகளும் 8-10க் குழந்தைகளும் உட்கார்ந்து போவதைப் பாருங்கள். இதோ இந்த வண்டியில் ஒருசீமாட்டி உயர்ந்தபுடவையுடுத்து நிறைந்த அணிபூண்டு, வெளுத்த முகமும் இளைத்த உடம்புமாய், ஏங்கின பார்வையாய்த் தூங்கி வழிந்து கொண்டிருப்பதைப் பாருங்கள். இப்படி யின்னும் பார்க்கவேண்டிய காட்சிகளையெல்லாம் கண்டபின் அஸ்தமானவேளையில் அவரவர்கள் விடுபோய்ச் சேர்ந்ததும், மெதுவாய்ச் சந்தடிசெய்யாமல் புஷ்பகவிமானத்திலிருந்தபடி எழும்பூர், பூந்தமல்லி ரோட்டு, தேனும்பேட்டை, நுங்கம்பாக்கம், மைலாப்பூர் முதலான இடங்களிலுள்ள பெங்களாக்கள் தோட்டங்களின் நடுவே விளங்குவதையும், அந்த பெங்களாக்களில் வசிப்பவர்கள் முன்போல் எல்லாரும் வெள்ளைக்காரர்களாகவேயின்றி, வெள்ளைக்காரர்களைப்போல் வசிக்கக் கற்றுக்கொண்ட இங்கிலீஷ்படித்த பாரி உத்தியோகஸ்தர்கள், பெரியமனிதர்கள், வியாபாரிகள், டாக்டர்கள், கௌன்ஸில் மெம்பர்கள், பெரிய ஜட்ஜிகள், வக்கீல்கள், பாரிஸ்டர்கள் முதலிய சுதேச கனதனவான்கள் தங்கள் குடும்ப சகிதமாய் வசிப்பதைப் பாருங்கள். இவர்களெல்லாரும் வண்டி குதிரை வாஹனங்கள் நிறைந்தவர்கள். புருஷர்கள் பேரும் கீர்த்தியும், பணமும் மணமும் சம்பாதித்தலுத்து 'கிளப்பு'களிலும் கூட்டங்களிலும் கூடிப்

பேசி விளையாடி விச்ராந்தியடையப் பார்க்கிறார்கள். ஸ்திரீகள் குடும்ப காரியங்களைப்பார்த்துப் புருஷர் வரவை யெதிர்பார்த்து நகைத்த முகமும் சிரித்த உதடுமாய் வாசல்முகட்டில் வண்டியரவம் கேட்கவும் தங்கள் பர்த்தாவை எதிர்கொண்டழைத்துபசரிக்கக் காத்திருக்கிறார்கள். இதோ புஷ்பகவிமானத்திலிருந்தபடி கீழே குனிந்து பாருங்கள். இது தான்கனம்பொருந்திய கௌன்ஸில் மெம்பர் கனகசபேசய்யர் பெங்களா. அதோ பின்கட்டிலிருந்து தாழ்வாரத்தின் வழியாக முன்கட்டுக்குப் போகிறாரே அவர்தான் ஐயரவாள் தர்மபத்நி. எவ்வளவு அடக்கம், எவ்வளவு பொறுமை! நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் ஸ்திரீலக்ஷணங்கள் நாலும் அந்தம்மாளிடம்பொருந்தி விளங்குகிற அதிசயத்தைப் பாருங்கள். ஐயரவாள் காலில் கல்லு குத்தினால் அது அந்தம்மாளுக்குக் கண்ணிலுறுத்தினாற்போல் படும். அவருடைய க்ஷேமத்தையன்றி அந்தம்மாள் வேறு எதையும் நாடியறியார். கனம், தனம், சம்பத்து, குலம், நலம், கீர்த்தி, எல்லாம் பொருந்தியும் பகவான் புத்திரபாக்கியமொன்றைமட்டுமளிக்கவில்லை. அந்த பதிவிரதா சிரோமணி தன் பதிசிஷ்ருஷையில் அக்குறையையும்கூட கவனிக்காமல் தன் பதியே தனக்குக் குணமும், கனமும், குழந்தையும், பர்த்தாவுமென்று "தாய்க்குப்பின் தாரம்" என்கிற மூதுரைக்கிணங்கத் தாய்போலும் அவரிடத்து உள்ளன்புகசியத் தன் மாங்கல்யம் ஒன்றே தனக்கு எல்லா பாக்கியமும் சம்பத்துமென்று திருப்தியடைந்தவராயிருக்கிற மகிமை அவருடைய முகத்தொளியில் தெரிகிறது பாருங்கள். நடக்கும்பொழுது அவர் மனம் எவ்வளவு உற்சாகமாகவிருக்க விரும்பினும் தேகம் தளர்ந்து சோர்வுற்றிருப்பதால் தேகதாட்டியமின்றித் தளர்வு நடை நடக்கிறார். தன் பர்த்தாவுக்கு வேண்டிய சிஷ்ருஷை செய்யத் தனக்கு தேகசக்தியில்லையே யென்பது அந்த அம்மாளுக்கு ஒரு பெருங்குறை. பணத்தாலும் காசாலும் எவ்வளவோ செலவழித்து நாட்டு வைத்தியம், இங்கிலீஷ் வைத்தியம், யூனானி வைத்தியம், எல்லாம் பார்த்தார். ஒன்றிலும் குணப்படவில்லை. குக்குடபுரம் குப்பாசாஸ்திரிகள் குடும்ப புரோகிதராக வந்தபின் என்ன என்னவோ விருதங்களும், சமாராதனைகளும், ஆயுஷ்ஹோமங்களும் செய்யச்சொல்லி, எல்லாவற்றையும் வேதோக்தமாகவும் சம்பிரமமாகவும் செய்துவைத்தார். இந்தப் பூஜை நைவேத்தியங்களால் குப்பாசாஸ்திரிகள் தேகமும் மனமும் பூரித்ததேயன்றி அம்மாள் தேகம் சிறிதேனும் பூரிக்கவாவது பலப்படவாவதில்லை. குப்பாசாஸ்திரிகள் வந்ததும் இது தெய்வ குற்றமாயிருக்குமென்று தெய்வ ஆராதனைகள் என்னென்னவோ செய்யச் சொல்லி செய்துவைத்தார். சாஸ்திரிகள் சடங்குகள் செய்வதிலும் யஜ்ஞங்கள் செய்வதிலும் ச்ரௌதம்வரையில் வாசித்திருக்கிறார். கர்ம காண்டத்திலுள்ள மந்திரங்களெல்லாம் அவருக்கு நெட்டுருப்பாடம். ஆனல் ஆத்மஞான விருத்தியின்மையால் கிளிப்பிள்ளை போல் மந்திரங்களைச் சொல்லவும் சொல்லி வைக்கவும் தெரியுமேயன்றி, "மனம் ஒரு வழிப்பட்டது மந்திரம்" என்னும் மூத்தோர் வசனப்படி, மனதை ஒருவழிப்படுத்தி மந்திரங்களை உள்ளபடி பிரயோகிக்கும் மர்மம் அவருக்குத் தெரியாது. குப்பாசாஸ்திரிகள் குட்டி தீக்ஷதர் பட்டத்துக்கு ஆசைவைத்து அது நிறைவேறும்போலிருந்த சமயத்தில், இந்த அம்மாளுக்கு தேகபலம் குறைந்து அசக்தம் அதிகமாகி ஆகாரம் செல்வதும் நின்றுபோகவே, சாஸ்திரிகளிடத்திலுண்டாயிருந்த நம்பிக்கை சிதறிப்போம் போலிருந்தது. அம்மாளுக்கு நம்பிக்கை குறைந்ததோ சாஸ்திரியாருக்கு வந்த யோகமெல்லாம் விநியோகமாய்விடும். அம்மாள் தினம் "சாஸ்திரிகளே, நீர் சொன்னபடியெல்லாம் செய்தும் இந்த தெய்வக்குற்றம் நீங்கவில்லையே! தேகம் வரவரப் பலம் குறைந்துவருகிறதே. நடமாடவும் சக்தியில்லை! ஆகாரமும் தள்ளுபடியாய் வருகிறது! இனிமேல் என்ன செய்கிறதென்று தோன்றவில்லை. நான் பிள்ளையில்லாக் குறையைக்கூடப் பெரிதாகப் பாராட்டவில்லை. பர்த்தாவைவிட்டுப் பிரிவதைமட்டும் நினைக்கவும் சகியேன். இதற்கு சீக்கிரத்தில் ஒரு வழி சொல்லாவிட்டால், ஐயரோடு சொல்லி வேறு வேதசாஸ்திரம் படிக்கத் தெரிந்து தீக்ஷைபெற்ற பிராம்மணரை யழைத்து இந்த தெய்வகுற்றத்தை நீக்க வழிதேடவேண்டியதுதான். உம்மை நம்பி மோசம் போனேன்! இனியும் காலதாமதம் செய்தால் மோசம் வரும். என்ன சொல்கிறீர்? இன்றைக்கு வெள்ளிக்கிழமை! சுக்கிரவாரம்!

இன்னும் ஒருவாரத்தில் நீர் இதற்கு ஒரு விமோசனம் தேடாவிட்டால், அடுத்த வெள்ளிக்கிழமைப் பூஜைக்கு வேறு தீக்ஷதர்தான் வரவழைக்கவேண்டும். இதுமட்டும் கெட்டி. இன்னமும் இப்படியே உம்மை நம்பிக்கொண்டிருந்தால் இலவுகாத்த கிளிபோல் மோசம்போகவேண்டியதுதான். என் பர்த்தாவை விட்டுப் பிரிய நேரிடுமோவென்று நினைத்தாலும் எனக்குக் கொஞ்ச நெஞ்சமிருக்கிற பிராணனும் ஒடுங்கிவிடுகிறது! நான் என்ன செய்வேன்!"-என்று பெருமூச்சுவிட்டு சோபாவில் உட்கார்ந்துகொண்டிருந்தவர் அப்படியே மூர்ச்சித்துப்போய்விட்டார். சாஸ்திரியாருக்குப் பீதி பலமாய்ப்பிடித்துவிட்டது. அங்கு மிங்கு மோடினர். வேலைக்காரப் பெண்களைக் கூப்பிட்டு மூர்ச்சித்துக் களைத்தவருக்கு வேண்டிய உபசாரம் செய்து அந்த ம்மாள் களைதீரச்செய்வது அவருக்குப் பெரிய பிரமாதமாகப் போய்விட்டது.

* * *

"அம்மா! நீங்கள் இப்படி அதைரியப் படக்கூடாது! ஸ்வாமி உங்களுடைய எண்ணத்துக்கு மாறு செய்யமாட்டார்! 'மனம் போலிருக்கும் மாங்கலியம்' என்பது பொய் யல்ல! ஆகையால் நீங்கள் தைரியத்தைக் கைவிடாமல் சற்றுப் பொறுத்துக்கொண்டிருந்தால் இன்னம் ஒரு வாரத்துக்குள் நான் இதற்குத் தக்க பரிகாரம் தேடிக்கொண்டு வருகிறேன். அதுவரையில் நீங்கள் ஸ்வாமி யிடத்திலுள்ள பக்தி குறையாமலும் மனோதைரியத்தைக் கைவிடாமலுமட்டுமிருக்கவேண்டும். இந்த இரண்டிக்கும்மட்டும் குறைவன்னியிலிருக்கிற பக்ஷத்தில், நான் எந்தக் காடு மேடு வனம் வனாந்தரமானாலும் சரி சுற்றியலைந்து, என் அம்மணியின் குறையை நீக்க வல்ல சித்தபுருஷரைக் கொண்டுவருவேன். பக்திசிரத்தையும் மனோதைரியமும் குறைய விட்டால்!—என்னை என்ன செய்தாலும் சரி! நான் ஏழைப் பிராமணன்; காடிருக்கு ஓடிருக்கு!—என்னால் ஒன்றும் ஆகாது! சற்றுத் துணிந்து சொல்ல இடங்கொடுத்தால் வேறு யாராலும் ஒன்றும் ஆகாது! இப்பொழுது மூர்ச்சித்ததுபோல் மூர்ச்சித்துப்போக இடம் கொடுக்கவே கூடாது. தைரியத்தைக் கைவிடாமல் ஸ்வாமியின்பேரில் பாரத்தைப் போட்டிருந்தால், பகவான் ஒரு வழி காட்டுவார். இவ்வளவுதூரம் என் வார்த்தையில் நம்பிக்கையுண்டானல் இன்று சாயரக்ஷையே நான் தக்க பெரியவர்களைத் தேடிக்கொண்டுபோகப் புறப்படுகிறேன். பகவான் கிருபையால் இன்னம் ஒருவாரத்தில் திரும்பிவருகிறேன். அதுவரையில் பக்தியில் குறையாமல் மனோதைரியத்தையும் கைவிடாமல் இருக்கவேண்டும். உத்தரவானல் பிரயாணத்துக்கு வேண்டிய யத்தனம் செய்ய இப்பொழுதே போகிறேன்" என்றார்.

அம்மாள் வாத்தியாரை ஏறிட்டுப் பார்த்தார். பேசினது வாத்தியார்தானே அல்லது தன் இஷ்ட தேவதையோ என்று சந்தேகிக்கும்படி பார்த்தார். "ஸ்வாமி! நான் இனி மனுஷ சகாயத்தை நம்பியிருக்கவில்லை. தங்களை தேவதாஸ்வரூபமாகப் பாவித்து தங்க ளிஷ்டப்படி நடக்க சித்தமாயிருக்கிறேன். நான் களைப்பிளைப்பு வேளையில் ஏதாவது பிசகான வார்த்தை சொல்லியிருந்தால் க்ஷமித்தருளவேண்டும். சாயங்காலம் பிரயாணத்துக்கு வேண்டிய செலவுக்கும் இதரச் செலவுகளுக்கும் வேண்டிய பொருளும் இதர சகாயங்களும் சித்தமாயிருக்கும். தாங்கள் ஏதோ பராக்காயிராமல் இந்த ஏழைமீது பூரண கிருபைவைத்து பக்திசிரத்தையோடு மேல்ஆகவேண்டிய காரியங்களைப் பார்க்கவேண்டும்."

"அப்படியே ஆகட்டும் அம்மணி! இதற்கு நீங்கள் சொல்லவும் வேண்டுமா!" என்று சாஸ்திரியார் மடிசஞ்சி மூட்டை கட்டப் புறப்பட்டார்.

(இன்னும் வரும்)

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(From Shakespeare.)

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* (ஸ்ரீராஜநாயகி.)

## நாடகபாத்திரங்கள்.

### புருஷர்கள்.

கிலேசவர்மன்—உதயபுரிராஜா.

ஹேமசந்திரஸிங்—கிலேசவர்மாவின் தமையனாகிய இறந்துபோன ஹேமசந்திரவர்மாவின் குமாரன்—பட்டத்துக்கு இளவரசன்.

புலஸ்தியவர்மா—ராஜாவின் அந்தரங்க காரியதரிசி.

ஹரிராஜஸிங்—இளவரசனுடைய நேசமன்.

லக்ஷ்மணஸிங்—புலஸ்தியவர்மாவின் குமாரன்.

வருணமித்ரன்
கிருஷ்ணதாசன்
உக்கிருத்திரப்பிரதாபன்
கடோரக்கஜசேனன்
ஆலஹரிகன் } ஆலோசனை சபையோர்.

பிருகத்சேனன்
மார்க்கசேனன் } சேனா உத்தியோகஸ்தர்கள்.

வீரசேனன்—அரண்மனைக்காவல் சிப்பாய்.

பிரதாபஸிங்—ஜோதிபுரி ராஜ்யத்து இளவரசன்.

ராதாகிருஷ்ணன்—புலஸ்தியவர்மாவின் வேலைக்காரன்.

### ஸ்திரீகள்.

ஜோதிமஹால்—ஹேமசந்திரவர்மாவின் விதவை: ஹேமசந்திரஸிங்குக்குத் தாய்; தற்காலம் கிலேசவர்மாவின் மனைவியாகிய இராணி.

உத்பலாக்ஷி—புலஸ்தியவர்மாவின் மகள்.

### இதரர்கள்.

புரோகிதர்கள், பிரபுக்கள், சேனாபதிகள், சிப்பாய்கள், நாடகக்காரர்கள், தூதர்கள், சேவகர்கள், தோட்டிகள், ராஜஸ்திரீகள் பெருமாட்டிகள், முதலியோர்கள்.

இறந்துபோன ஹேமசந்திரவர்மாவின் பிதிருதேவதை.

ஸ்தலம் { ராஜபுத்திர சமஸ்தானம். உதயபுரி பட்டணம்.

காலம்:—டில்லி சக்ரவர்த்திகளின் காலம்.

"The blessed gods in servile masks
Plied for me my household tasks."—*Emerson.*

"The World means intensely, and means good;
To find out its meaning is my meat and drink."
—*Robert Browning.*

"If you are in need of the fruit of my labour,
I am in greater need of the labour itself,
I perish of rust and rest."—*Emerson.*

### காக்ஷி.—2.

ஸ்தலம்—ராஜாவின் கொலு மண்டபம்.

காலம்—பிறபகல்.

(ராஜா, ஹேமசந்திரஸிங், புலஸ்தியவர்மா, லக்ஷ்மணஸிங், வருணமித்ரன், கிருஷ்ணதாஸன், பிரபுக்கள், சேவகர்கள் எல்லோரும் வருகிறார்கள்.)

(கிலேசவர்மா) ராஜா.—நமதன்புக்கிருப்பிடமாயிருந்து மகா கௌரவம் பெற்ற நம் தமையனார் பரலோகஞ்சென்ற துக்கம் எப்பொழுதும் புதுமை மாறாது நம் ஹிருத்யத்தில் குடிகொண்டிருந்தாலும், அதற்காக நாமும் நமது அன்புள்ள பிரஜைகளும் இவ்வளவு காலம் அலங்கோலம் கொண்டிருந்த போதிலும், நம்மையும் அடியோடு மறந்துவிடக்கூடாதென்கிற ஞாபகம் இப்பொழுது தோன்றினமையாலும், இவ்வளவுநாளாய் நல்வாழ்விலிருந்து நமது ஊழியத்துக்குப் பாத்திரமாயிருந்து திடீரென்று துக்கத்தை யடைந்திருக்கிற நமது அரசியின் அந்தஸ்துக்குக் குறைவுவராமல் பாதுகாப்பது கடமையாயிருந்தமையாலும், மகம்மதீயத்தாய் வயிற்றிற் பிறந்த அவர்களை மகம்மதீய விதிப்படி நாம் இப்பொழுது மணந்து, பிதிருக்கிரியைகளுக்குப் பிறகு விவாகத்தையும் முடித்து துக்கமும் சுகமும் சமநிறையாகக் கலந்தனுபவிக்க நேர்ந்திருப்பது உங்களுக்கெல்லாம் தெரிந்த விஷயமே! இந்த விஷயங்களிலெல்லாம் நீங்கள் நமக்கு ஒத்தாசையாயிருந்தது

பற்றி உங்களுக்கெல்லாம் நம் வந்தனம், ஆனால் இப்பொழுது சொல்லவேண்டிய விஷயம் தானென்னவென்றாலோ அந்த ஜோதிபுரிச்கன்றுக்குட்டியாகிய பிரதாபலிங் ஜோதிபுரி ராஜாவாகிய தன் சிற்றப்பனைக் கேளாமல் அவன் வியாதியினால் எழுந்திருக்கமாட்டாது படுத்திருக்கும் இத்தருணத்ததில் நம்மை ஒரு பொருட்டாக மதியாமலும் நம் தமையன் இறந்துபோனதினால் நம் ராஜ்யம் நிலைகுலைந்திருக்கும் என்கிற தப்பு எண்ணத்தோடும், தன் தகப்பனிடத்திலிருந்து நம் தமையனார் பந்தயத்தில் ஜயித்த பாதி ராஜ்யத்தைத் திரும்பிப் பிடிங்கிவிடலாமென்கிற பேராசைகொண்டு நம்மேல் படையெடுத்து வருவதாகப் பயமுறுத்திக் கடிதங்கள் எழுதிக்கொண்டு வருகிறான். அதுவிஷயமாக நாம் இப்பொழுது ஜோதிபுரி ராஜனுக்கு ஸ்ரீமுகம் எழுதி கிருஷ்ணதாஸர் வருணமிசிரர் இவ்விருவர் மூலமாக அனுப்புகிறோம். அதில் எழுதியிருக்கிற விஷயம் என்னவெனில் நமக்கும் ஜோதிபுரிக்கும் உள்ள நிபந்தனைப்படி ஜோதிபுரிராஜன் தன் பிரஜைகள் நமக்கு விரோதமாகப் பிரதாபலிங்குக்கு ஒத்தாசை செய்யக்கூடாதென்று அவர்கட்கு ஆக்ஞாபிக்கக் கடமைப்பட்டிருக்கிறான் என்பதே! ஆகையால் உங்களிருவரையும் ஜோதிபுரிக்குப்போய் ஸ்ரீமுகத்தைக் கொடுத்து பதில் வாங்கிவரும்படி ஆக்ஞாபிக்கிறோம். இது விஷயமாக நாம் விவரமாய் எழுதியிருக்கிறதைத் தவிர வேறு சுயமாக யாதொரு ஏற்பாடும் செய்ய நாம் உங்களுக்கு அதிகாரம் கொடுக்கவில்லை என்பதையும் அறிவீர்கள். நல்லது நேரமாகிறது போய் வாருங்கள்! நீங்கள் நம்மிடத்தில் வைத்திருக்கும் விசுவாசம் நீங்கள் போய்த் திரும்பிவருகிற சீக்கிரத்தில் தெரியவேண்டும்!

வருணமி / கிருஷ்ண } :—இந்த விஷயத்திலும் மற்றெவ் விஷயத்திலும் எங்கள் விசுவாசத்தைத் தெரிவிக்க காத்திருக்கிறோம்.

ராஜ!—அதற்கு சந்தேகமில்லை, க்ஷேமமாய் போய்வாருங்கள்!

(ஒரு சேவகனைப்பார்த்து) நமது ராணி அவர்களை அழைத்துவா!

(கிருஷ்ணதாசன், வருணமிசிரன், சேவகன் இம்மூவரும் போகிறார்கள்.)

என்னப்பா, லக்ஷ்மணசிங், என்ன சமாசாரம்? ஏதோ விண்ணப்பம் செய்துகொள்ள வேண்டுமென்று சொன்னாயே என்ன? இந்தராஜ்யத்தில் நியாயமான விஷயத்தைப் பேசி வாயிழந்தவர்கள் கிடையாது. நாமாய் கொடாது நீ வாய்திறந்து கேட்கும்படி ஒரு விஷயம்கூட இருக்கிறதா? உன் தகப்பனிடத்தில் நாமிருக்கிற விசுவாசத்துக்கு வாய்க்குக் கையாவது உடலுக்குத் தலையாவது அவ்வளவு உதவியாயிருக்கமாட்டா - என்ன வேண்டும் சொல்!

லக்ஷ்மண:—மகாராஜ, எனக்கு டில்லிக்குப்போக அவ்விடத்து உத்தரவு வேண்டும்! நான் அவ்விடத்து மகுடாபிஷேக மஹோத்ஸவத்தைக்கண்டு களித்து வந்தனமளித்துப் போக வந்தவன் இனி இங்கு தாமதிப்பது சரியல்ல! என்னுடைய கல்விப்பயிற்சிகள் தடைபட்டுப்போகின்றன!

ராஜ:—உன் தகப்பனாரிடத்தில் அனுமதி கேட்டுக்கொண்டாயோ? அவரென்ன சொல்கிறார்?

புலஸ்திய:—ஸ்வாமி! அவன் அதி பரிசிரமத்துடன் என்னை உபத்திரவித்து என் அனுமதியைப் பிடுங்கிக் கொண்டான்! நானும் அவனுடைய சம்மதமென்கிற பத்திரத்தில் என் உத்தரவு என்கிற முத்திரையை அரை மனதோடு வைத்து விட்டேன்! (ராணி வருகிறாள்)

ராஜ:—நல்லவேளையில் புறப்பட்டு க்ஷேமமாய்ப் போய்வா! குழந்தாய்!

லக்ஷ்மண:—எனது நமஸ்காரங்களை அவ்விடத்தில் அங்கிகரிக்கப் பிரார்த்திக்கிறேன்! (என்று போய்விடுகிறான்.)

ராஜ:—என்னருமை மருமகனே!

ஹேமசந்:—(தனக்குள்) அருமையோ, எருமையோ!

ராஜ:—ஹேமசந்திரா, என் குழந்தாய்!

ஹேமசந்:—(தனக்குள்) மாமா மருமகனே மைத்துனா என்தம்பி—மேலே தெரியவில்லை (என்று பாடுகிறான்) அந்த உறவு போலத்தான் வந்துவிட்டது நம்மிருவருக்கும்!

ராணி:—என்ன ஒரே மௌனமாயிருக்கிறாயே! எத்தனை நாளைக்கு துக்கம் கொண்டாடுகிறது இப்படி!

ஹேமசந்:—நானா கொண்டாடுகிறேன்! சுக துக்கங்கள்தாம் என்னை உறவு கொண்டாடுகின்றன (மெதுவாய்) தாங்கள் உறவு கொண்டாடுவதுபோல்!

(ஜோதிமஹால்)ராணி:—நான் சொல்வதைக் கேள் குழந்தாய்! இந்த அலங்கோல வஸ்திரங்களைத் தூரக்கழற்றிவை; நல்ல உடுப்புகளைப் போட்டுக்கொண்டு பார்வைக்கு லக்ஷணமாயிரு. எப்பொழுதும் குனிந்த தலையோடு மண்ணிற் கலந்த தந்தையைத் தேடுவதிற் பயனென்ன?

ஹேமசந்:— (தனக்குள்) "மண்ணிற்கலந்த" வென்று நீ சொல்லிய காலமெல்லாம் மாறிவிட்டதோ?

ராணி:—உலகத்தில் சாவு என்பது சகஜமென்றறியாயோ? அஃதில்லாவிட்டால் பரலோகத்துக்கு வேறுவழிதானேது?

ஹேமசந்:—அது இவ்வளவு சகஜமாய்ப் போய்விட்டதே என்று தான் ஆச்சரியப்படுகிறேனம்மா!

ராணி:—துக்கத்துக்கும் ஓரளவுண்டல்லவோ? அதையறிந்து இவ்வேஷங்களை மாற்றி சரியாய் நடந்துகொள்!

ஹேமசந்:— (தனக்குள்) துக்கத்துக்களவுண்டு, வெட்கங்கடந்த ஆசைக்குத்தானளவில்லை (உரக்க) நான் வேஷமென்பதை யறியேன்! கடைசியில் இதெல்லாம் வேஷமாகவா உங்களுக்குத் தோன்றுகிறது! என்னுடைய பழைய வஸ்திரங்களையாவது, கண்ணீரையாவது முகத்தின் வாட்டத்தையாவது கண்டு என் துக்கத்தை ஊகிப்பது ஆகாத காரியம். ஏனெனில் நீங்கள் சொல்லுகிறபடி இவைகளெல்லாம் ஒருவன் அந்தரங்கத்தில் துக்கமில்லாமல் வெளியில் மேற்போட்டுக் கொள்ளக்கூடிய வேஷங்கள் தான்! ஆனால் என் விஷயத்தில் இவைகளெல்லாம் நானாகச் செய்து கொள்ளாமல் என் மனவருத்தத்தினால் தானாக அமைந்தனவென்று அறிவீர்கள்!

ராணி:—உன் தகப்பனாரிடத்தில் நீ வைத்திருக்கிற பிதுரு விசுவாசத்திற்காக நீ இப்படியெல்லாம் நடந்து கொள்வது நியாயமே! ஆனால் உன் தகப்பனாருக்கு ஒரு தகப்பனார் இறக்கவில்லையா? அதற்குமுன் அந்தத் தாத்தாவுக்கும் ஒரு தகப்பனார் இறக்கவில்லையா? அவர்களெல்லாம் கொஞ்ச கொஞ்சகாலம் துக்கித்துப் பிறகு தங்கள் காரியத்தைப் பார்க்க வில்லையா? உனக்குமட்டும் இவ்வளவு பிடிவாதம் கூடுமா? துக்கத்தில் மூழ்கி ஏங்கிப் போவது நமது க்ஷத்திரிய தர்மத்துக்கழகல்லவே! மேலும் அது ஈசுவரனுடைய சங்கல்பத்திற்கு விரோதமான மனதைக் காண்பிக்கிறது! நம்முடைய அற்பபுத்தியால் ஈசுவரனுடைய செயல்களை ஆழம்பார்க்கலாமா? கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் நம்முடைய புத்திக்கே அது பிசகு என்று ஏற்படும்! ஞானிகள் எப்பொழுதும் கடவுள் செயல்களுக்கு "ததாஸ்து" என்று சொல்லுகிறவர்களேயொழிய வேறொன்றுமில்லை! ஆதலால் இந்தப்பயனற்ற துக்கத்தை மறந்து இனி நம்மை பிதிருஸ்தானத்தில் பாவிப்பாய்! ஏனெனில் நமக்குப்பிறகு நீ தான் இந்த ராஜ்யத்தை ஆளவேண்டிய யுவராஜனென்பது உலகறிந்த விஷயம்! அப்படியே நாமும் உன்னிடத்தில் உன் பிதாவைக் காட்டிலும் பதின்மடங்கு அதிகமாகவே பிரீதி வைத்திருக்கிறோம். ஆகையால் நீ காசிக்குப் போகாமல் நம் சபைக்கணிகலமாக இங்கேயே யிருந்து நமக்கு வலதுகைபோலுதவியும் முதல் மந்திரிபோல் புத்தியும் சொல்வாய்! நீ ராஜகுமார வித்யாசாலையில் படிக்கவேண்டிய விஷயங்கள் இன்னுமேதாவதிருந்தால் அதை போதிக்கத்தக்க வித்வான்களை இங்கேயே வரவழைத்து விடுவோம்! உனக்கு உபாத்தியாயராயிருந்த ஹரிராஜலிங்கமும் இங்கே வந்திருக்கிறதாகக் கேள்வி. அவர் நல்லவித்வான்! அவரை வேண்டுமானால் இங்கேயே நிறுத்தி விடுவோம்!

ராணி:—அதற்காக நீ என்னைவிட்டுக் காசிக்குப் போகவேண்டாம்! உன் தாய் சொல்வதை உற்றுக்கேள்!

ஹேமசந்:—நீங்கள் சொல்லுகிறபடி என்னால் கூடுமானவரையில் நடக்கக் காத்திருக்கிறேன்.

ராணி:—இப்பொழுதுதான் நீ பேசுகிறது காதுக்கு மதுரமாயிருக்கிறது! நாம் போ

வோம் வா, ஜோதி! ஹேமசந்திரன் நம் வேண்டுகோளுக்கு சம்மதித்த சந்தோஷத்துக்காக 12 பீரங்கி வெடிகள் தீர்க்கச் சொல்லுவோம்! இன்றிரவு நமதிஷ்ட மித்திர பந்துக்களுக்கெல்லாம் நல்ல விருந்தளிப்போம்! வா!

(ஹேமசந்திரனைத் தவிரஎல்லோரும்போய் விடுகிறார்கள்.)

ஹேமசந்:—ஐயோ தெய்வமே! இந்த ஊனுருகி உணர்வழிந்து உள்ளங்கரைந்து தண்ணீராய்ப் போகாதா? ஏன் தற்கொலைசெய்யக்கூடாதென்று சாஸ்திரங்களும் சட்டங்களும் சொல்லுகின்றன? இதென்ன! உலகம்என்ன உபயோகமற்ற வாழ்வு! என்ன வெட்டிப்பேச்சு! சாப்பிடுகிறது, தூங்குகிறது, மறுபடி சாப்பிடுகிறது, மறுபடி தூங்குகிறது; மிகுதியிருந்தால் பெண்டு பிள்ளைகளுக்கு நகை செய்து போடுகிறது! பொழுது போகாவிட்டால் நல்ல ஆடைகளுடுத்து வாகனங்களிலேறிக் கொண்டு, ஊர்சுற்றுகிறது, அல்லது சபை கூடுவதாகப் பெயர் வைத்துக் கொண்டு கும்பல் கூடி விஷயமில்லாத பிரசங்கங்கள் செய்து அமைதியாயிருக்கும் ஆகாசத்தில் க்ஷணத்துக்கு அநேகம் ஆயிரம் சலனங்களை உண்டு பண்ணுகிறது! ஒருவனுக்காவது தன்வேலையைக் கவனித்துக்கொண்டு சும்மாயிருக்கத் தெரிகிறதில்லை! எனக்கு ஒருவேலையும் பிடிக்கவில்லையே; மனுஷியன் செய்யக்கூடிய வேலையாக இங்கொன்றையுங் காணோமே! பிசாசுகளுக்கும் மிருகங்களுக்கும் மத்தியில் குடியிருந்தால் மனிதனுக்கு என்னவேலை அகப்படும்? இதோ பார்; புருஷன் இறந்த மூன்று மாதத்திற்குள் இன்னொரு புருஷனை சம்பாதித்துவிட்டாள் இந்தராணி! அவரிருந்தவடிவென்ன, இவனுடைய அவலக்ஷணமென்ன, மலைக்கும் மடுவுக்குமாயிருக்கிறதே! மேலும் அவர் இவளிடத்தில் எவ்வளவு பிரியம் வைத்திருந்தார், இவள்மேல் காற்றடிக்க சகியாரே! இவளுடைய அந்தப்புரத்தில் சூரியன் கடுமையாய்ப் பார்க்கவொட்டாரே! ஐயோ அம்மா!—ஸ்திரி என்கிறபெயருக்கே சபலசித்தம் என்றர்த்தமோ; நீ அவர் மேல்சாய்ந்து சிரித்துக்கொண்டிருந்ததை யெல்லாம் நான்நினைக்கவும் வேண்டுமா? நீ அழுதகண்ணீர் இன்னும் உலரவில்லையே! அதற்குள்ளாகவா மறுவிவாகம்! காக்கை குருவிகூடவல்லவோ ஒருவருஷத்துக்குவேறு ஜோடியைத் தேடாது; ஆனால் காக்கைகுருவிகளெல்லாம் ராஜாத்திகளல்லவே! அப்பேர்ப்பட்ட மகாபுருஷனைத் தொட்டபிறகு இவனிடத்தில் உனக்கு எப்படி மனது ரமித்ததோ? எனக்கும் அர்ச்சுனனுக்கும் ரூபலாவண்யத்திலாவது சௌரியபராக்கிரமத்தியாவது எவ்வளவு சம்பந்தாசம்பந்த முண்டோ அவ்வளவுதான் என்சிற்றப்பனுக்கும் என்பிதாவுக்குமிருக்கிறது! இதெல்லாம் நல்லகாலத்திற் கடையாளமல்லவா! நானும் வாயைத்திறக்க வழியில்லை, வயிறும் வெடிக்க மாட்டேனென்கிறது!

(ஹரிராஜஸிங், மார்க்கசேனன், பிருகத்சேனன் மூவரும் வருகிறார்கள்.)

ஹரிரா:—யுவராஜருக்கு நமஸ்காரம்!

ஹேமசந்:—க்ஷேமமா, தங்களைப்பார்த்து—

யாரது, ஹரிராஜர் போலிருக்கிறதே!

ஹரிரா:—ஆம், தங்கள் ஊழியன்தான்!

ஹேமசந்:—அப்படிச் சொல்லக்கூடாது தாங்கள்! அந்தவார்த்தை நானல்லவோ சொல்லவேண்டியது!—இங்கெப்பொழுது வந்தீர்கள்? கூட யாரங்கே! மார்க்கசேனா?

மார்க்க:—சுவாமி!

ஹேமசந்:—நல்லதையா! உங்களையெல்லாம் பார்க்க சந்தோஷமாயிருக்கிறது—ஆமாம், தாங்கள் காசியிலிருந்து எப்பொழுது வந்தீர்கள்! வித்யாசாலை உத்தியோகத்தை விட்டுவிட்டீர்களா என்ன? அல்லது தங்களுக்கு அருகமான சிஷ்யர்கள் கிடைக்கவில்லையா?

ஹரிரா:—தங்களைக் கண்டு துக்கம் விசாரித்து என்னால் கூடிய உதவி செய்யவந்தேன்!

ஹேமசந்:—என்ன நீங்கள்கூட என்னைப் பரிஹாஸம் செய்கிறீர்களே! ராணா அவர்களுடைய—நூதன விவாகத்தைப் பார்த்துப் போக வந்தீர்கள்—போலும்!

ஹரிரா:—ஆம்! அதற்கென்ன செய்கிறது! விவாகமும் இதே சமயத்தில் நிறைவேறும்படி சம்பவித்தது!

ஹேமசந்!—எந்த விஷயத்திலும் "செட்டாக" விருக்கிறது நல்லதல்லவா? பித்ருக்கிரியைகளுக்காக சேகரித்த சாமான்கள் மிகுதியிருந்தால் அவை வீண்போகாதபடி ஒரு விவாகத்தையும் கூட முடித்துக்கொள்

வது எவ்வளவு நலம்! உபநயனத்துக்கென்று பந்தல் போட்டால், அதே பந்தலில் தகுந்த பெண்குழந்தை அகப்பட்டால் அப்படியே பையனுக்கு ஒரு விவாகத்தையும் முடிக்காமல், அதற்காக வேறு பந்தல் போட்டுக்கொண்டிருப்பார்களா? ஐயோ அப்பா! இவைகளையெல்லாம் கண்ணால் பாராது எங்கேயாவது ஓடிப்போய்விட்டாலும் நலம்!—ஐயோ அப்ப, என் தந்தை முகம் எனக்கெதிரில் நிற்கிறாற்போலிருக்கிறது!

ஹரிரா:—எங்கே, எங்கே?

ஹேமசந்:—இல்லை, என் மனதில் தோன்றுகிறதென்று சொன்னேன்?

ஹரிரா:—நானும் அவரை ஒருதடவை பார்த்திருக்கிறேன்! அவர் ஒரு உத்தம புருஷன்.

ஹேமசந்:—இனி அவரைப்போல் கிடைக்குமா என்ன?

ஹரிரா:—நேற்றிரவுகூட நான் அவரைப் பார்த்தாற்போலிருக்கிறது!

ஹேமசந்.—பார்த்தீர்களா! யாரை? எப்போ!

ஹரிரா:—தங்கள் பிதாவை.

ஹேமசந்:—என் பிதாவையா!

ஹரிரா:—அவசரப்படாதேயுங்கள்! நான் சொல்வதை முற்றிலும் கவனமாய்க் கேளுங்கள்! இதோ இவ்விருவரையும் வேண்டுமானாலும் சாக்ஷிக்குக் கேட்டுப்பாருங்கள்.

ஹேமசந்:—அப்புறம், மேலே!

ஹரிரா:—இதோ மார்க்கசேனன், பிருகத்சேலன் இவ்விருவரும் இரவில் அரண்மனை வாசலில் காவல் நிற்கையில், இரண்டுநாள் நடுநிசியில் திடீரென்று தங்கள் தந்தையின் உருவம் அவர்கள் கண்ணுக்குப் புலப்படவே, அவர்கள் நடுங்கி ஒன்றும் பேசமாட்டாது தண்ணீராய் உருகிப் போய்விட்டார்கள்! உடை, உருவம், அங்கம் அடையாளம் எல்லாம் தங்கள் தந்தையைப்போலவே இருந்ததோடுகூட கவசந்தரித்து ஆயுதபாணியாக இவர்களுக்கு ஒரு கஜதூரத்தில் சென்றது! இந்த ரகஸியததை இவர்கள் என்னிடத்தில் சொல்லவே நானும் மூன்றாவது இரவு இவர்களோடுகூடவே காவலிருந்து பார்த்தேன்; அவர்கள் சொன்னதில் ஒரு அக்ஷரங்கூடப் பிசகாமல் அப்படியே எனக்கும் தென்பட்டது—தங்கள் பிதாவை நான் பார்த்ததில்லையா என்ன?—இவ்விரு கைகளுக்குமிருக்கும் வித்தியாசங்கூட இல்லை அவ்வுருவத்துக்கும் தங்கள் தந்தைக்கும்!

ஹேமசந்:—இதெல்லாம் எங்கே நடந்தது?

ஹரிரா:—நமதரண்மனைவாசல் தாழ்வாரயில்தான்.

ஹேமசந்:—தாங்கள் அதனிடத்தில் ஒன்றும் பேசவில்லையா?

ஹரிரா:—சுவாமி, நானும் பேசிப் பார்த்தேன்! ஆனால் அது ஒன்றும் பதில் சொல்லவில்லை—ஒருசமயத்தில்மட்டும் ஏதோ சொல்ல வாயெடுப்பதுபோலிருந்தது! ஆனால் உடனே கோழி கூவவே அது திடீரென்று மறைந்துவிட்டது.

ஹேமசந்:—இது மிகவும் அதிசயமாயிருக்கிறதே!

ஹரிரா:—ஆனாலும் அவ்வளவும் உண்மையே! இதைத் தங்களுக்குத் தெரிவிப்பது எங்கள் கடமையென்று தோன்றினமையால் அப்படியே சொல்லிவிட்டோம்.

ஹேமசந்:—அதெல்லாம் சரிதான், ஒப்புக்கொள்ளுகிறேன்! ஆனாலும் என் மனது என்னவோ தத்தளிக்கிறதே; இன்றிரவு காவலுண்டா?

மார்க்க. பிருகத். }—உண்டு சுவாமி!

ஹேமசந்:—ஆயுதபாணியாகவா வருகிறது?

மார்க்க. பிருகத். }—அப்படிதான் வருகிறது சுவாமி!

ஹேமசந்:—பாதாதிகேசபரியந்தம் கவசத்தோடா?

மார்க்க. பிருகத். }:—உச்சிமுதல் உள்ளங்கால்வரையில் கவசந்தரித்தபடியே!

ஹேமசந்:—அப்படியானால் அதன் முகம் தெரியவில்லையோ?

ஹரிரா: }—அதன் முகமூடிமட்டும் தூக்கப்பட்டிருந்தது!

ஹேமசந் :—முகம் அதிக உக்கிரமாக இருந்ததோ ?

ஹரிரா :—முகத்தில் வியசனம் மேலிட்டிருந்ததேயொழிய கோபம் அதிகமாகத் தெரியவில்லை !

ஹேமசந் :—முகம் சிவந்திருந்ததா வெளுத்திருந்ததா ?

ஹரிரா :—மிக வெளுத்திருந்தது !

ஹேமசந் :—உங்களை உற்றுப்பார்த்ததா ?

ஹரிரா :—நன்ருய்ப் பார்த்தது!

ஹேமசந்:—நானங்கில்லாமற் போனேனே!

ஹரிரா :—இருந்தால் அதிக ஆச்சரியப்பட்டிருப்பீர்கள்.

ஹேமசந் :—அதற்கு சந்தேகமென்ன! வெகு நேரமிருந்ததோ ?

ஹரிரா :—சுமார் ஒரு நூறு எண்ணுகிற நேரம் இருந்தது.

மார்க்க: } —இன்னும் அதிக நேரமிருக்கும் !
பிருகத்: }

ஹரிரா :—நான் பார்த்தபோது அதற்கு மேலிருந்திராது !

ஹேமசந் :—தாடியில் நரை தோன்றியிருந்ததல்லவா ?

ஹரிரா :—நான் அவரை உயிரோடு பார்த்தபோதிருந்ததுபோலவே கருப்பும் வெளுப்பும் கலந்திருந்தது.

ஹேமசந் :—இன்றிரவு நானும் அங்கே வருகிறேன். ஒருக்கால் இன்றைக்கும் வந்தாலும் வரும்.

ஹரிரா :—நிச்சயமாய் வரும்.

ஹேமசந் :—என் பிதாவைப்போல் வரும் பக்ஷத்தில், யமனே பிரத்தியக்ஷமாக வந்து பேசாதே என்று தடுத்தாலும், நான் அதனேடு பேசியே தீருவேன்! இதுவரையில் இவ்விஷயத்தை யாருக்கும் வெளியிடாவிட்டால் இனி மேலும் அப்படியே வைத்திருங்கள்! இன்றிரவு நடக்கும் விஷயங்களும் அப்படியே ரகஸியமாயிருக்கட்டும். உங்கள் அன்புக்கு நான் தகுந்தபடி மறவாமல் மரியாதை செய்வேன்! நடப்பதை சும்மா பார்த்துக்கொண்டிருங்கள். யாரோடும் பேசமட்டும் வேண்டாம். நல்லது, போய் வாருங்கள்; நான் இன்றிரவு இரண்டாவது ஜாமத்தில் உங்களை அரண்மனை வாசலில் பார்க்கிறேன்.

மூவரும் :—தாங்கள் சித்தப்படி செய்யக் கடமைப்பட்டிருக்கிருேம்.

ஹேமசந் :—நல்லது நண்பர்களே! (ஹேமசந்திரன் தவிர மற்ற மூவரும் போய்விடுகிருர்கள்.)

என் தந்தையாவது, ஆயுதபாணியாகத் தோற்றவாவது! இதில் ஏதோ மோசமிருக்கிறது! இன்னும் இருட்டவில்லையே! முன்னமே சொன்னேனல்லவா, இதெல்லாம் நல்லகாலத்துக் கடையாளமல்லவென்று! இருட்டுகிறவரை சும்மா இருக்கவேண்டியதுதான். எவ்வளவுதான் மறைத்தாலும் தானே உண்மை ஒருநாள் வெளியாகிவிடும்.

(போய்விடுகிருன்.)

(இன்னும் வரும்.)

———(*)———

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.
## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

(அதிகாரம், 8-வது)

கல்யாணத்தின் விமரிசையைப்பற்றி நாம் சொல்லவேண்டியது அவசியமில்லை. சேஷய்யர் வீட்டுக்கல்யாணம் அந்த நாட்டுக்கே ஒவ்வொருவருக்கும் ஊர்முழுவதும் கல்யாணம்போல் விளங்கியது. கல்யாணத்தின் ஆடம்பரமும் கூட்டமும் ஒரு மாதத்திற்கு முன்னேயே ஆரம்பித்துவிட்டதென்றல் கல்யாணத்தின் விமரிசையை சொல்லவும் வேண்டுமோ. அந்த ஊரின் சுற்றுக் கிராமங்களில் ஒருவர் வீட்டிலாவது அடுப்புப்புகையே கிடையாது. எல்லோரும் குடும்ப சமேதராய் கல்யாணத்திற்கு வந்துவிட்டார்கள். வெகு தூரதேசங்களிலிருந்து சிலர் தக்ஷிணைக்கும் சிலர் சாப்பாட்டுக்கும் சிலர் சங்கீதத்திற்கும் சிலர் வேடிக்கை பார்ப்பதற்கும் இப்படி எல்லோரும் குழந்தைகள்முதல் கிழவர்கள் வரையில் வந்திருந்தார்கள். சேஷய்யர் வீட்டுக்கொட்டகை சாதாரணக் கொட்டகையாக இருக்கவில்லை. அந்த கொட்டகைக்குள் வந்துவிட்டால் அந்த ஜோடிப்பினாலும் சித்திரங்களினாலும்

ஒருவருக்கும் பூலோகத்தில் இருப்பதாகவே தெரியாது. அது தேவலோகமோ என்னமோவென்று சந்தோஷிப்பார்கள். நாகசுரத்தில், 2–ஜதை. பாண்டுவாத்தியத்தில், 2–ஜதை. சதிர், 2–ஜதை, இப்படி சேஷய்யர் ஜதை ஜதையாய்த் தருவித்திருந்தார். கல்யாணத்தன்று சீக்கிரமே எல்லாரும் ஸ்நாநம் செய்துவிட்டு விருதம்செய்ய ஆரம்பித்தார்கள். விருதம் முடிந்தவுடனே கல்யாண வீட்டிற்கழைக்கப்பட்டு கல்யாணத்திற்கு செய்யவேண்டிய வைதீக காரியங்களெல்லாம் ஆரம்பிக்கப்பட்டன. ஸ்ரீனிவாசன் இஷ்டப்படி அவன் மனைவி அவன் பக்கத்தில் உட்கார்ந்தாள். கல்யாணத்திற்கு வேண்டிய ஆரம்பங்கள் செய்யலாமாவென்று புரோகிதர்கள் நாராயணசாஸ்திரிகளைக் கேட்கவும் நாராயணசாஸ்திரிகள் சேஷய்யர் வீட்டு மனிதன் ஒருவனைக் கூப்பிட்டு அவன் காதோடு ஏதோ சமாச்சாரம் சொன்னார். அவன் போய் சேஷய்யர் காதோடு சொன்னான். சேஷய்யர் உடனே வெங்கிடாராம சாஸ்திரிகளைக் கூப்பிட்டு நாராயணசாஸ்திரிகளையும் தனித்து உட்காரவைத்துக்கொண்டு என்ன வெங்கிட்டாராமா வரதெக்ஷிணை விஷயமாய் நான் ஏதாவது உறுதி சொன்னேனா என்றார். வெங்கிடராமசாஸ்திரி தாங்கள் உருதி ஒன்றும் சொல்லவில்லை நான் நாராயணசாஸ்திரிகள் வரதெக்ஷிணை இரண்டாயிரம் கேட்பாரென்றேன். தாங்கள் அதற்கென்ன பார்த்துக்கொள்வோம் என்று சொன்னீர்கள்.

நாராயணசாஸ்திரி—வெங்குட்டு நான் உன்னிடம் கண்டித்து சொல்லவில்லையா? இரண்டாயிரம் ரூபாய்க்குக் குறைந்தால் சம்மதிக்கமாட்டேனென்று சொல்லவில்லையா.

சேஷய்யர்.—வெங்கிடாராமா நீ பெரியவனாயிருந்து பொய் சொல்லலாமா. நான் அப்போதே வரதெக்ஷிணை சமாச்சாரம் கூடாதென்று சொல்லவில்லையா.

வெங்கிடாராமசாஸ்திரி—அண்ணா என்பேரில் கோபித்துக்கொள்வதில் என்ன விசேஷம். நீங்கள் அப்போது இவ்வளவு கண்டிப்பாய் சொல்லவில்லே.

சேஷய்யர்—அடே கல்யாணம் நின்றுபோனால் போகிறது. நீ வார்த்தை இப்படி புரட்டலாய் சொல்லக்கூடாது.

இதற்குள் வாத்தியார் ஒருவர் சேஷய்யரிடம் வந்து அண்ணா லக்கினம் வந்துவிட்டதே. நாழிகையாகிறதே யென்றார். சேஷய்யர் கோபத்தோடு ஓய் வாத்தியாரே இன்னும் நாழிகை ஆனால் ஆகிறது நீர் உமது காரியத்தைப்பாரும் கல்யாணம் நிச்சயமானால் உமக்குச் சொல்லியனுப்புகிறேனென்றார். இதற்குள் ஊர் முழுவதிலும் பிரஸ்தாபம் நாராயணசாஸ்திரிகள் வரதெக்ஷிணையில்லாமல் கல்யாணம் நடக்கமுடியாதென்று சொல்லிவிட்டாரென்று பரவியது. எல்லோரும் இந்த வேடிக்கைபார்க்க ஏக கூட்டம் கூடிவிட்டார்கள். இதற்குள் வெங்கிடாராமசாஸ்திரிகள் மற்ற இருவர்களும் தகரார் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் மெள்ள காமேசுவரய்யரிடம் போய் கலந்து கொண்டார். காமேசுவரய்யர் நிரம்பவும் பயந்தவர். வெங்கிடாராம சாஸ்திரிகள் அவரிடம்போய் நாராயணசாஸ்திரிகள் ரொம்பவும் பொல்லாதவரென்றும் அவர் அவமானத்தைக்கூடப் பாராமல் கல்லியாணத்தை நிறுத்திவிடுவாரென்றும் பிறகு நஷ்டத்துக்கு தாவா செய்துவிடுவாரென்றும் ஆனால் தன்னிடத்தில் சேஷய்யர் வரதெக்ஷிணை கொடுப்பதாக ஆதியிலேயே ஒப்புக்கொண்டிருக்கிறாரென்றும் சொன்னார். காமேசுவரய்யர் இதைக்கேட்டு பயந்துகொண்டு உடனே சேஷய்யரையும் நாராயணசாஸ்திரிகளையும் கூட்டிவரச்சொன்னார். அவர்கள் வந்ததும் காமேசுவரய்யர் நாராயணசாஸ்திரிகளைப்பார்த்து என்ன அய்யாவாள் கலகப்பண்ண இதுதானா சமயம் என்றார்.

நாராயணசாஸ்திரி—ஐயா எனக்கு இந்த சம்பந்தம் இல்லாவிட்டால் போகிறது ஊர்முழுவதும் சிரிக்கும்படி செய்துவிட்டீர்களே, சேஷய்யர் கல்லியாணப்பந்தலில் 2000-ரூபா தருகிறேன் என்று சொன்னதினாலும் கல்லியாணச்செலவும் தருகிறேன் என்றதனாலும்தானே நான் சம்மதித்தேன்.

சேஷய்யர்—ஐயா இப்போ இரண்டாயிரம் ரூபாய் மட்டும் சொன்னீர்கள்; அதற்குள் உங்கள் செலவும் சேர்த்துகொண்டீர்களா—நல்லது நான் அப்படிப்பேசவுமில்லே அப்படிக் கொடுக்கவுமுடியாது கல்லியாணம் நின்றதினால் பாதகமில்லே.

காமேசுவரய்யர்—என்ன சேஷா என்பதறுகிறாய்! நீ ஒப்புக்கொண்டதாகத்தான் வெங்கிடாராமன்கூடச்சொல்லுகிறானே.

சேஷய்யர்— வெங்கிடாராமன் பின்னே மாப்பிள்ளைக்குச் சொல்லாமல் யாருக்குச் சொல்லபோகிறான் வேலிக்கு ஓணான் சாக்ஷி. காமேசுவரய்யர் சேஷய்யரைக் கூப்பிட்டு அந்த சமயத்தில் கல்யாணத்தை நிறுத்துவது சுத்த அவமானமென்றும் மாப்பிள்ளை பெண்ணைத்தொட்டு பெண் ஒரே மணையில் உட்கார்ந்தபிறகு வேறு பிள்ளையோடு உட்காரவைப்பது மிகவும் அவமானம் என்றும் சொல்லி சேஷய்யருக்கு உபதேசம் செய்தார்.

சேஷய்யர் தமையன் சொல்லை தப்பமுடியாமல் சம்மதித்தார். பிறகு காமேசுவரய்யர் நாராயணசாஸ்திரிகளைக் கூப்பிட்டு அய்யாவாள் இப்போது 2000-ரூபாயிக்கு என் உறுதியை நம்புங்கள் நான் கல்யாணமானவுடனே நீங்கள் ஊருக்குப் போகும்போது தந்துவிடுகிறேன் என்றார். நாராயணசாஸ்திரிகள் அதெல்லாம்முடியாது; வேண்டுமானால் எனக்கு இப்போது ரொக்கமாய் கொடுங்கள். இல்லாவிட்டால் நாங்கள் புறப்பட்டுப்போகிறோம் என்றார். கடைசியில் சிலர் மத்தியஸ்தம் செய்து கபட சிகாமணியாகிய வெங்கிடாராமசாஸ்திரியின் உறுதியின்பேரில்

நாராயண சாஸ்திரிகள் சேஷய்யரிடம் ரூபா—2500க்கு பாண்டு வாங்கிக்கொள்ள சம்மதித்தார். பாண்டு எழுதப்பட்டு சாக்ஷிகள் கையெழுத்துப் போட்டானபிறகு தான் நாராயணசாஸ்திரிகள் கல்யாணம் பந்தலுக்குள் வந்தார். இதற்குள் புரோகிதர்கள் எல்லோரும் காத்திருந்தார்கள். ஊர்முழுவதும் வெகு கேலியாய்விட்டது கல்யாணத்திற்கு ஆரம்பிக்கவே லக்னத்திற்கு பயந்துகொண்டே புரோகிதர்களெல்லாமந்திரங்களை 'த்நுமெயிலில்' விட்டார்கள். புரோகிதர்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு ஒருவர் சொன்னதை ஒருவர் சொல்லாமல் மூச்சுவிடாமல் கத்தினார்கள். ஸ்ரீனிவாஸனுக்கு ஒன்றும் ஓடவில்லை. அவன் வாய் ஏதோ புரோகிதர்களை வைவதுபோல் முணுமுணுத்துக்கொண்டிருந்ததே ஒழிய ஞாபகமெல்லாம் குழந்தை தங்கத்தின்பேரில் இருந்தது. ஸ்ரீனிவாஸன் அந்த சபைக்கு தன்னை ஒரு சேர்மேன்போல் நினைத்துக்கொண்டு அடிக்கடி மோதிரத்தைத் திருப்பிப் பார்க்கிறதும் சரிகை வேஷ்டிகளை இழுத்துக்கொள்கிறதுமாயிருந்தான். எல்லோரும் மாப்பிள்ளைக்கு இங்லீஷ் நன்றாய்த் தெரிகிறது என்று சொல்லும்படி இடையிடையே தன் சிநேகிதன் துரைசாமியோடு இங்லீஷில் பேசினான். அடிக்கடி பெண்டாட்டியை பார்க்கவேண்டுமென்ற ஆசையால் அந்தப்புறமாய்த்திரும்பி தூணைப் பார்ப்பவன் போலவும் சுவரை பார்ப்பவன்போலவும் பார்த்துவிட்டு அதோடு பெண்டாட்டியையும் ஜாடையாகப்பார்த்துக்கொண்டான். குழந்தை தங்கமும் அழகில் சிறந்தவளல்ல, ஆகிலும் காக்கைக்குத் தன் குஞ்சு பொன்குஞ்சு அல்லவா? ஸ்ரீனிவாஸனுக்கு அவளைப் பார்க்கும்போதெல்லாம் அவள் நகைகளின் ஜோதியால் அவளை அரம்பையென்று நினைத்துக்கொண்டான். தங்கம் தேகம் முழுவதும் நகையாய் இருந்தது. ஒரு வெள்ளைக்காரன் அந்த நகைகளைக் கண்டானானால் ஒகோ இந்தப்பெண் என்ன குற்றம் செய்ததோ தேகமுழுவதும் விலங்குபோட்டு கட்டி இருக்கிறார்களே! குற்றம் பெரிய குற்றம்போலிருக்கிறதே! என்று நினைப்பான். ஆகிலும் குற்றம் தங்கத்தின் குற்றம் அல்ல. ஸ்திரி ஜாதிகளின் நகைப் பைத்தியம் என்ற குற்றந்தான். இதெல்லாம் போதாமல் நெற்றியில் நோய் மாடுகளுக்கு கட்டியிருப்பதுபோல் சுட்டி என்கிற ஓர் நகையையும் பாதி நெற்றியை மறைத்துக்கட்டி இருந்தார்சள். சேஷய்யருக்கு அதிசயப்பெண்ணாதலால் கல்லியாணத்திற்கென்றே இரண்டாயிரம் ரூபாய்க்கு நகை செய்திருந்தார். பிறகு லக்னம் வந்தவுடனே மாங்கிலியதாரணமும் ஆயிற்று. அப்போது நாகசுரக்காரனுக்கும் தத்வஞானம் எற்பட்டு சகல வாத்தியமென்று பேர்வைத்து சகல தத்துவத்தையும் காட்டகூடியதாக நாகசுரக்காரனும் மேளகாரனும் சேர்ந்து "அகப்பட்டுக்கோண்டான், அகப்பட்டுக்கோண்டா' ன்னென்று சகலவாத்தியம் தட்டினார்கள். எதார்த்தத்தில் தனிமையாய்த் திரிந்துகொண்டிருந்த, விசாரமில்லாத பிருமசாரி அப்போது கல்யாணம் செய்துகொண்டதனால் சம்சாரமாகிற வலையில் அகப்பட்டுக்கொண்டவன் தானே. அப்போது ஸகலவாத்தியமும் அகப்பட்டுக்கொணடானென்று தொனிக்கக் கேழ்பானேன்.

கல்யாண முகூர்த்தமானபிறகு சாப்பாட்டின் வைபவத்தை நாம் சொல்லவேண்டியது அவசியமில்லை. பிராமணர்கள் தங்கள் கெடவாத்தியம்போன்ற தொந்திகளை ஏராளமாக தொந்தி வெடித்துப் போகும்படி நிறப்பிக்கொண்டார்கள். கல்யாணத்தில் இக்காலத்தில் சம்மந்திகளுக்கென்று தனியிடம் வைக்காமல் பாரபக்ஷமில்லாமல் செய்கிறதுபோல் சேஷய்யருக்குச் செய்யத்தெரியவில்லை. மேலும் வெங்கிடாராமசாஸ்திரிகளும் அவரை அப்படி செய்ய விடவில்லை. நாராயணசாஸ்திரிகளுக்கும் அவர்வீட்டு பரிசாரகன் முதல் தனியாக சாப்பிடுவதற்கு இடம்வைத்துவிட்டுத்தான் மற்ற இடங்களில் இலை போடவேண்டும் சம்பந்திகளுக்கெல்லாம் பக்ஷணவகைகள் போட்டு சலித்துப்போய் எல்லோரும் எரிந்துவிட்டுப் போய்விட்டார்கள். அந்த பக்ஷணத்துக்கென்று ஆசைப்பட்டுக்கொண்டு வந்திருந்த ஏழைகளுக்கு திருப்தியாகும்படி கிடைக்கவில்லை. சாப்பாடுதான் இப்படி பாரபக்ஷமாய் இருந்ததென்றால் தக்ஷிணைக்கும் மகாராஜர் வெங்கிடாராம சாஸ்திரிகள் வந்துவிட்டார். தனக்குவேண்டியவர்களுக்கெல்லாம் ஒருரூபாய் தக்ஷிணை கொடுத்தார். தனக்குத்தெரியாதவன் எத்தனை தூரதேசத்திலிருந்து வந்திருந்தும் எத்தனை சாஸ்திர நிபுணனாயிருந்தும் அறை ரூபாய்க்குமேல் கிடையாதென்று சொல்லிவிட்டார். சிலர் தக்ஷிணை வாங்கிக்கொண்டு போனதும் புறக்கடைவழியாய் வீட்டிற்குள் வந்து அங்கிருந்து பந்தலுக்குள் வந்து இரண்டு மூன்றுதடவை தக்ஷிணை வாங்கினார்கள். கடைசியில் என்ன தக்ஷிணை கொடுத்தும் வைதிகர்கள் திருப்தியடையவில்லை. ஒருவன் மூத்தம்மா பாட்டி தசாஸது அன்றுகூடவல்லவா ஒருரூபாய் தக்ஷிணை கொடுத்தார்கள், இவர்கள் அதுகூட கொடுக்கவில்லையே யென்றான். வேறொருவன் அடே மடையா, என்ன கல்யாணத்தில் அவசகுனம்போல்சொல்லுகிறாய் என்று ஒரு அறை அறைந்தான். இதற்குள் சண்டையுண்டாகி அனேகர் போய் தடுத்து மத்தியஸ்தம் செய்து என்னவென்று கேட்க சமாசாரம் இப்படி என்று தெரிந்து எல்லோரும் சிரித்தார்கள்.

ஸ்ரீனிவாசன் நலங்கிட்டதும் ஔபாஸனம் செய்ததும் பூலாச்செண்டாடினதும் வெகுவேடிக்கையாயிருந்தது. அனேகம் சிறுபெண்களெல்லாம் ஸ்ரீனிவாஸனை அம்மங்கான் அகமுடையான். அத்தங்கா அகமுடையான் என்று உறவு கொண்டாடிக்கொண்டு அவனுடன் கேலி செய்தார்கள்—ஸ்ரீனிவாஸனுக்கும் அதுகளெல்லாம் வேண்டியிருந்தது. ஔபாஸனத்துக்கு உட்கார்ந்தால் குட்டிகளெல்லாம் சேர்ந்து பொண்டாட்டியை கூட்டிவா. விட்டால் வரமாட்டான் என்று சொல்லுவார்கள் ஸ்ரீனிவாஸன் அதைக் கேட்டுக்கொண்டு போனால்

பிறகு வெருமனே கூப்பிட்டால் வருவாளா? பேர் சொன்னால்தான் வருவாள் என்பார்கள். ஸ்ரீனிவாஸன் சிறுபிள்ளையாதலால் அவள் பெயரைச் சொன்னவுடனே எல்லாரும் பெண்டாட்டியின் பெயரைச் சொல்லிவிட்டான் சொல்லிவிட்டான் என்று கூத்தாடுவார்கள். நலங்கிட உட்கார்ந்தால் பெண்டாட்டியை ஆரத்தி எடுக்கும்போது மடியில் உட்காரவைத்துக்கொண்டால்தான் ஆச்சு என்பார்கள். ஸ்ரீனிவாஸன் அப்படியே உட்கார்த்திக்கொண்டால் அந்தப் பெண்ணைப் பார்த்து எண்டி ஆம்படையான் மடியில் அதற்குள்ளே உட்காருவார்களா அடி பெண்ணே உனக்கு வெட்கமாக இருக்கவில்லையா என்று கைகொட்டி சிரிப்பார்கள். ஒளபாஸனத்தின்போது ஓசைப்படாமல் பின்னால்வந்து இருவர் தலைமயிருக்கும் முடிச்சல் போட்டுவிடுவார்கள்.

பிறகு சிரிக்காமலிருந்து எழுந்திருக்கும்போது பெண் புருஷன் பக்கம் இழுக்கப்படும்போது எண்டி இப்போ முதல் அவனைக் கட்டிக்கொள்ளப்போகிறாயா. நாங்கள் இருக்கிறதுகூட உனக்குத் தெரியவில்லையா. இவள் தைரியத்தைப்பாரடி என்று கேலிசெய்து பிறகு முடிச்சை அவிழ்த்துவிடுவார்கள். சதுருக்கு உட்கார்ந்தால் அங்கே நாராயண சாஸ்திரிகள் ஊரில் ஒன்றும் ஐவேஜு இல்லாதவன்கூட ஒருவர்க்கொருவர் போட்டிபோட்டுக்கொண்டு தாசியிடம் ரூபாய்கொடுத்து பிறருக்கு சந்தனம் பூசச்சொல்லி கேலிசெய்வார்கள். பணம் தாசியின் கையில் அவள் கையைத்தொட்டுக் குலுக்கித்தான் கொடுப்பார்கள். கமலாவடி வைதீகர்கள்கூட கல்யாணப் பந்தலுக்குள் போனால் தன் தலையில் அட்சதையைப் போடும்படி வாத்தியாரிடம் சிபார்சுசெய்து ஒருவேளை மறந்துபோனால் என்ன செய்கிறது என்று வாத்தியாரே இங்கே இங்கே நான் கமலாவடி கிராமம் சம்பந்தி அய்யரவாளைச் சேர்ந்தவன்.—என்று தலையில் அட்சதை போடுவதற்காக குனிந்துகொண்டு தலையை அடித்துக்கொள்வதுபோல் காண்பித்துவிட்டு, தக்ஷிணையை வாங்கிக்கொண்டு கொட்டகைக்குள் வந்ததும் தாசியைக் கண்டு சொருக்குப் போட்டுக்கொண்டு தாசியை கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள். வைதீகம் குப்பாதீக்ஷதர் நாராயணசாஸ்திரியைப் பார்த்து நாணு இன்று ராத்திரி உனக்கு வேட்டைதான், நேற்று பூரி ரூபாய் ஒன்றுக்கும் செலவுவந்துவிட்டது என்றார். நாணு, அடே ஒங்கப்பன் தலைமுறையிலாவது உன் தலைமுறையிலாவது தாசி வீடு போயிருந்தால் தெரியும், உனக்கு ஒரு ரூபாய்க்கு வரப்பட்ட தாசியா இவள் என்றார். தாசி சதிர் ஆடும்போது நட்டுவன்கள் தலை ஆடின ஆட்டம் தலை எங்கே ஒடிந்து விழுந்துவிடுமோ என்று தோன்றினது, ஒருவன் பாடும்போது அவன் முகம் அழுவதுபோலிருந்தது. ஒருவன் பிசாசு ஆடுவதுபோல் ஆடினான். வைதீகர்களுக்கு இதையெல்லாம் பார்ப்பதற்கு வெகு சந்தோஷம். கமலாவடி கிராமத்தார் சங்கீதம் என்பதே கேட்டதில்லை. அவர்களை நம்பி சேஷய்யர் வித்வான்களையெல்லாம் தருவித்துவிட்டார். நாராயணசாஸ்திரிகள் இவர்களுக்கெல்லாம் என்ன கொடுக்கப்போகிறீர்கள் என்று சேஷய்யரைக்கேட்டார். அவர் மூவாயிரம் ரூபாய் என்றதும் நாராயணசாஸ்திரிகள் என்ன ஐயா இத்தனை ரூபாய் கொடுத்து இந்தப் பயல்களை சும்மாயிருக்கச்சொல்லுகிறதா! எல்லோரையும் சேர்ந்து வாசிக்கச் சொல்லுங்களென்றார். உடனே நாகசுரம் பாண்டு வாத்யம் பாட்டுக்கச்சேரியெல்லாம் ஏககாலத்தில் நடந்தது. பாடகர்கள் ஒருவருக்காவது உத்ஸாகமில்லை. நாராயணயசாஸ்திரிகளுக்கு சதிர் ஒன்றுதான் பிடித்தது. அதுமட்டும் தனியா வைத்துக்கொண்டார்.

(இன்னும் வரும்)

——(o)——

## OBITUARY.

## DR. S. SATHIANADHAN.

## டாக்டர் ஸாமுவேல் ஸத்தியநாதன்

சென்னை ப்ரெஸிடென்ஸி காலேஜில் ப்ரோபெஸ்ஸராயிருந்த டாக்டர் ஸத்தியநாதன் அவர்கள், அமெரிக்காவுக்குச்சென்று ஜப்பான் மார்க்கமாய்த் திரும்பிவருகையில், வழியில் சிக்காய்விழுந்து 'யோகொஹாமா'வில் சிலதினங்கள் வருந்தியிருந்தபின் குணப்படுவதுபோல் காட்டி வியாதி பிரமாதமாய் மேலிட்டு திடீரென்று அவரைக்கொண்டுபோய்விட்டது. இந்த துக்க சமாசாரம் சென்றமாசமே தெரியவந்ததாயினும் நம் பத்திரிகையச்சிட்டு முடிந்தபின் நமக்கு எட்டியதால் இதைப்பற்றிக் குறிப்பிட சாத்தியப்படவில்லை. இவர் நல்ல வித்வான். குணசீலரென்று பேர்வாங்கினவர், இவர் எம். ஏ. எல்எல். எம்., என்கிற மிகவும் உயர்ந்த வித்தியா பட்டங்கள் பெற்றதன்றி கோம்ப்ரிட்ஜ் யூனிவர்ஸிடி சங்கத்தார் எல்எல். டி. என்கிற மஹா உந்நத பட்டமும் இவருக்கு அளித்தார்கள். இவர் தத்துவ சாஸ்திரங்களைப் பற்றிப் பிரசங்கம் செய்யவேண்டி அமெரிக்கா யூனைடெட்ஸ்டேட்டிலுள்ள கலாசாலையதிகாரிகள் இவரை யழைத்ததின்பேரில் அங்கு சென்று ஜப்பான் வழியாகத்திரும்பி வருகையில் வியாதிகண்டு மாண்டார். இவருடைய

முதல்தாரம் ஸ்ரீ கிருபாபாய் ஸத்தியநாதன் இங்கிலீஷில் நன்றாகப் பயின்றவர். அவர் எழுதிய கமலா, சகுணா என்னும் இங்கிலீஷ் கிரந்தங்கள் எல்லாராலும் கொண்டாடப் பட்டன. அவர் இறந்தபின் டாக்டர் ஸத்தியநாதன் மிஸ்டர் கிருஷ்ணம்மாவின் புத்திரியும் யூனிவர்ஸிடி வித்தியாபட்டம்பெற்றுப் பிரதாப சிலராய் விளங்கினவருமான மிஸ் கமலரத்நம் எம். ஏ. அவர்களை விவாகஞ்செய்துகொண்டார். இவர் நடத்திவரும் "இந்தியன் 'லேடீஸ் மாகஸின்" என்னும் பத்திரிகை இந்தியாவெங்கும் பரவிப் புகழ்பெற்று விளங்குவதாயிருக்கிறது. இந்த அம்மணிக்கு இப்படி தௌர்ப்பாக்கியம் நேர்ந்ததைப்பற்றி மிகவும் விசனிக்கிறோம். இவருக்கு இரண்டு குழந்தைகள் இருக்கின்றனர். இவருக்கு நேர்ந்த ஆருத்துபரை அக்குழந்தைகளினிமித்தம் பொறுத்துச் சகித்துக் கொண்டு, அவர்களுக்குத் தாயும் தகப்பனும் தானேயாகி அக்குழந்தைகளை வளர்த்து முன்னுக்குக் கொண்டுவருவதில் தன்பொறுமை சாமர்த்தியமெல்லாம் காட்டியுழைப்பாரென்று எண்ணுகிறோம். இவருக்கு நேர்ந்த துக்கத்தில் நாமும் கூடிக்கலந்து அநுதாபசிந்தையால் இவர் துயரை நம் துயராகவகித்து வருந்தலானோம்.

——(*)——

## பண்டிதநடேச சாஸ்திரியார்.

"வயிற்றுக்கு சாதத்தைப்போட்டு வாசலிலனுப்பினேன், பிரஜ்ஞையற்றுப் பிணமாய் வீட்டுக்கு வந்தார். அது தான் தெரியும் எனக்கு." இந்த ஒரு விசனத்தில் இவருடைய அந்திய சரித்திரமெல்லாம் எழுதி முடிந்தாய்விட்டது.

ஏப்ரல்மீ 11௳ இராத்திரி சாப்பிட்டுவிட்டுக் கோயிலுக்குப் போனவர் திரும்பி வருகையில், மிரண்டோடிவந்த குதிரை தாக்கிக் கீழ்விழுந்து மண்டையில் அடிபட்டு உடனே பிரஜ்ஞையற்றவராக, வீட்டுக்குத் தூக்கிவந்து வேண்டிய சிகிச்சைகள் செய்துபார்த்தும் பலிக்காமல் மறுநாள் உதயத்தில் பிராணன் கூட்டை விட்டுப்பிரிய சிவசாயுஜ்யம் பெற்றார். இவர் இப்படி திடீரென்று போனதில் நமது பிராணனும் பாதி போய்விட்டது. உலகத்தில் ஜனங்கள் பலபலவிதமாக விருப்பார்கள். ஆனால் நற்குணங்களெல்லாம் சேர்ந்தமைந்த சாதுசங்க யோக்கியரான சத்புருஷர், ஸம்ஸாரத்திலிருந்து கொண்டும் தாமரையிலையில் தண்ணீர்போல் ஒட்டியும் ஒட்டாது, சுகதுக்கங்களையெல்லாம் சமமாகப்பாவித்து, ஓயாமலொழியாமலுழைப்பதும், ஈசுவரசங்கல்பத்தை முன்னிட்டு என்ன நேர்ந்தாலும் உள்ளங் குழம்பாமல் சமன்வயசித்தராய், "தீனதயாளு" வாய், எதையும் நல்லஹிருதயத்தோடு வகித்து உற்சாகத்தையிழக்காது பொறுமைக்கிடமாயிருந்துழைத்துவருவதும், நல்லார் பொல்லார் எல்லாருக்கும் நல்லவனாகவிருந்து வருவதுமாகிய இந்த சத்குணங்கள் பொருந்திய புண்ணிய புருஷன் இவரைப்போல் வேறொருவரைக்கண்டதில்லை. இவரோடு கலந்து பழகிய 15-வருஷங்களில் ஒரு தடவையாவது இவர் நலங்குலைந்து சிணுங்கிப் பிணங்கியிருக்கக்கண்டதில்லை. இக்காலத்தில் இங்கிலீஷ்படித்தவர்கள் அவரவர் உத்தியோகவேலைகளைச்செய்துமுடித்தால் அதுவே பெருங்காரியமென்றிருப்பது வழக்கம். இவரோ, எவ்வளவு கடினமாக ஸர்க்கார் சேவகத்திலிருந்துழைத்தாலும், இரவில் எட்டுமணி வரையிலுழைத்துக் களைத்தவராயினும் வீடு வந்து ஸ்நானம் செய்து போஜனம் புஜித்தாரானால், புனர்ஜன்மமெடுத்ததுபோல் ஊக்கம்மேலிட்டு கதைகளும், கிரந்தங்களுமெழுதுவதில் இராவுமுழுதும் வேலையாகவிருந்து ஒருமணி, இரண்டு மணிக்கு நித்திரை போவார். இவ்வளவுழைத்தும் தேகதாட்டியம் குறையாது மனோற்சாகமும் மங்காது "ஊக்

கமதுகவிடேல்" என்பதற்கு உதாரணமாக விருந்து வந்தார். சம்சாரம் பெருத்தவராயினும் (இவருக்கு ஆணும் பெண்ணுமாக 11-குழந்தைகள்) ஹிருதயத்தில் பெந்தம் ஒட்டாதபடி தூய்மையாயிருந்து திருவருளைச்சதா சிந்தித்துவந்தார். "வாசாமேவதாந்தம்" பேசுகிறது இவருக்குப் பிடிக்காது. நடத்தையிலேயே இவருடைய குணத்தையும் மணத்தையும் கண்டு கொண்டாடவேண்டும். இவரை யெல்லாரும் கொண்டாடினும், இவருடைய உத்தம குணத்தை யுள்ளபடியறிந்துணர்ந்து மணந்து கிரகித்தவர் வெகு சிலரேயாவார். இவர்களில் முதன்மை பெற்றவர் இவருடைய இல்லறம் சிறக்க இவருக்கு வாழ்க்கைத்துணையாயிருந்த தர்மபத்நியேயாம். ஸ்ரீகிருஷ்ண பகவான் கீதையில் "தன்னை நம்பினோரையே தான் மேன்மேலும் பரிசோதிப்பதாகவும், தேகமே யாத்மாவென்றிருப்பவர்களை இலகுவில் விட்டுவிடுவதாகவும்" சொல்லியிருக்கிறபடி, "தீனதயாளு"வுக்கு ஏற்ற தர்மபத்நியாகவிருந்த அந்த அம்மணியை பார்த்தசாரதி இப்படி அபாரசோதனை செய்தது ஆச்சரியிக்கத்தக்கதானாலும், ஸ்புடமிட்ட பொன், நெருப்புத் தாக்கத் தாக்கப் பிரகாசிப்பதுபோல், அந்தம்மணியின் குணம் இவ்வளவு அபார சோதனையிலும் தன் ஜோதி மங்காது பிரகாசித்தது ஆச்சரியத்திலு மாச்சரியமே. இப்படி திடீரென்று நேர்ந்த அபாரமான ஆபத்திலும் அந்தம்மணி தன் தெய்வபக்தியும உள் நம்பிக்கையும் குன்றாது, மனோதிடனையும், தன்னடக்கத்தையும் கைவிடாது கடைசிவரையில் தான் செய்யவேண்டிய பதிசிஷ்ருஷையில் சிறிதும் குறையாது, அந்தப் பிரேதம் பிராணன் சகிதமாயிருந்தால் எப்படி நடந்து கொள்வாரோ அப்படியே அமைதயும் ஆர்வமும் குறையாது அபரக்கிரியைகள் எல்லாம் கிரமப்படி நடக்கப் பார்த்ததன்றி, பாடை கட்டிப் பிணத்தை யெடுக்கப்போகையிலும், அதன் கண்ணைத் திறந்து தன் கண்ணினுள்ள புருஷனை அக்கண்ணில் பார்த்து "என்னப்பா, என் கண்ணே, நீ போய் வருகிறையா" வென்று அன்பு பூரிக்க ஆர்வம் நிறைந்த குரலால் சொன்னதோர் சொல்லும், நடந்து கொண்டதோர் நடையும் பாவனையும், அவரைப் பார்த்திருந்த நமக்கு அவர் மண்ணில் பிறந்த பெண்தானோ அல்லது பெண்வேஷம் தரித்து நடிக்கும் ஈசுவரியேதானோ வென்று பிரமிக்கும்படி நேரிட்டது. அதற்குப்பின் என்ன நினைத்தாலும் அந்த நிமிஷத்தில் அவரை ஈசுவரியேயென்று நம்பி ஹிருதய பூர்வமாய் அவரிருந்ததிக்கு நோக்கி மானசிகமாய் நமஸ்கரிக்காமலிருக்க நம்மால் முடியவில்லை. இப்படிபபட்ட பதிவிரதா சிரோமணிகள் குப்பையில் கிடக்கும் மாணிக்கம் போல், நாடோடிகளாய்த் திரியும் பெண்கள் நடுவே யவதரித்து திடீரென்று மனுஷ ஜன்மம் தாங்கமாட்டாத ஆபத்து சம்பத்துகள் நேர்ந்தபொழுது "விண்ணிலொளி" போல், "மண்ணிலொளியாய்" "மனைக்கோர் விளக்காய்" "கண்ணிற் பாவைபோல்கணவற்கிசைந்த" நங்கைகளாய் விளங்குவதால் தான் ஆரிய தர்மம் அடியோடு மறைந்து போகாது நம்முள் அறிந்துமறியாமல் ஓங்கி வளர்ந்து பிரகாசிக்கிறது. இவர் சரித்திரத்தை வாசிக்க விரும்புவோர் இவர் எழுதிய "தீனதயாளு" சரித்திரத்தை வாங்கி வாசிக்கக் கடவர்கள். இச்சமயம் மேலெழுத நமக்கு எண்ண மோடவில்லை.

——(*)——

## எஸ். ஏ. ஸ்வாமிநாதையர்.

தென்னாற்காடு ஜில்லா சிதம்பரத்தில் ஸப் இஞ்சினியராகவிருந்த ம-ா-ா-ஸ்ரீ எஸ். ஏ. ஸ்வாமிநாதைய்யர் பி. வி. இ., அவர்கள், ஏதோகாரியமா வெளியூர் சுற்றித் திரும்பிவருகையில் குதிரையிரண்டோட, வண்டியிலிருந்தவர் பின்புறமாகக்கீழ் குதிக்க தலையில் அடிப்பட்டு உடனே மூர்ச்சியாகிப் போய்விட்

டார். அவரை அப்படியே வீட்டுக்குக் கொணர்ந்து வேண்டிய சிகிச்சைகள் செய்தும் படுகாயம்பட்டிருந்த அவர் பிரஜ்ஞை திரும்பாமலே ஒருநாளிருந்து பரலோகப் ராப்தியடைந்தாரென்று கேட்கமிகவும் விசனிக்கிறோம். இவர் புத்திரிகள் இருவரில் ஒரு பெண்ணுக்கு விவாகம் நிச்சயமாகி இன்னொரு பெண்ணுக்கு நிச்சயமாகப் பேச்சு நடந்துகொண்டிருக்கையில் அதேகாரியமாக அவசரமாகத்திரும்பி வந்தவர், வழியில் இந்தக் கதியடைந்து, தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது என்பதற்குச்சான்றாய் சிவலோகமடைந்தார். வருடைய பத்னிக்கும் குழந்தைகளுக்கும் திடீரென்று நேர்ந்த இந்த அபாரத்துக்கத்தில் நாம் பூர்ணனுதாபம்கொண்டுவருந்துவதோடு அவர்களுக்கு ஈசுவரன் இக்கஷ்டத்தைத் தாங்கும்வலிமையளிப்பாரென்று பிரார்த்திக்கிறோம்.

——(*)——

## NOTICE OF BOOKS.

## புஸ்தகக் குறிப்பு.

### 1. *A Tamil Prose Reader. Price 6sh.*

### தமிழ் வாசகம் விலை—ரூ 4-8-0

தமிழ் நாட்டிலுழைத்துத் தமிழ் கற்றுத் தமிழபிமானம் தலைக்கேறி தமிழணங்கையே யேற்றிப் போற்றித்தொழும் வாசனையேவிட்ட டாக்டர்ஜி.யூ.போப்ஐயர் அவர்கள், 70-வயதுக்கு மேலாகியும் இந்தியாவுக்குவரும் ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களும், மற்றவர்களும், இத்தேசத்தில் வழங்கும் தமிழ் பாஷையை எளிதில் அறியும்பொருட்டு அனேக வாசகங்களும், இலக்கணங்களும் செய்திருக்கிறார். இவர் சமீபத்தில் திருவாசகத்தை மொழிபெயர்த்ததன்றி இதற்கு முந்தி நாலடியார், குறள், இவைகளை மொழிபெயர்த்தும், உரையெழுதியும் ஆங்கிலேயருக்கு வேண்டியபடி விளங்கச் செய்திருக்கிறார். இப்பொழுது ஆக்ஸ்போர்டிலுள்ள 'க்ளாரண்டன் ப்ரெஸ்'ஸில் இந்த வருஷம் 7-வது பதிப்பாகப் பிரசுரித்திருக்கும் வாசகப்புஸ்தகம் மிகவும் உபயோகமானதாயிருக்கிறது. இதில் செந்தமிழ் வாசகநடை விளங்குவதற்கான கதைகளும் பாடங்களும் முதலதிகாரத்தில் கூட்டி, 2-வது அதிகாரத்தில் வியவகார நடைத்தமிழும், 3-வது அதிகாரத்தில் இலகுவான கதைகளும், 4-வது அதிகாரத்தில் பஞ்சதந்திரம் மித்திரலாபமும், 5-வது அதிகாரத்தில் கச்சேரிநடை விளங்க தஸ்தாவேஜு விவரங்களும், 6-வது அதிகாரத்தில் உத்தியோகமுறையிலெழுதும் விகிதங்கள் மனுக்களும் சவிஸ்தாரமாய் விளங்க அனேகம் குறிப்புகளோடு பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. டாக்டர் போப் துரையவர்கள் தமிழுக்குச் செய்யுமுதவி பெரிதேயாம்.

### 2. ஸனாதனதர்மம். விலை ரூ-1.

இது மதுரை தியஸாபிகல் சங்கத்தலைவர் ம-ா-ா-ஸ்ரீ பி. நாராயணய்யரவர்கள் காசி ஸெண்ட்ரல்காலேஜ் கமிட்டியார்வெளியிட்ட மதபோதகனுகிரந்தங்களில் முக்கியமான ஒன்றை அவர்கள் அனுமதிபெற்றுத் தமிழ்ப்படுத்திப் பிரசுரித்த மிகவும் அருமையான ஒரு கிரந்தமாம். இது ஜனவரி மாசத்திலே வெளிப்பட்டதாயினும் உடனே முதல் பதிப்பு காப்பிகளெல்லாம் செலவாகிவிட்டனவென்று கேட்கச்சந்தோஷமடைந்தோம். இதில் சுலோகங்கள் கிரந்த அக்ஷரத்திலும், வியாக்கியானவிசேஷார்த்தங்கள் தமிழிலுமாக அச்சிடப்பட்டிருக்கிறது. இது இந்து பாடசாலைகளில் மட்டுமன்று, ஹிந்துக்கள் ஒவ்வொருவர் வீட்டிலுமிருக்கவேண்டியது அவசியம். இந்த சநாதனதர்மத்தையே நாம் அடிக்கடி எழுதிவந்திருப்பதால், இப்பொழுது விசரித்தெழுதுவது சாத்தியமாகவில்லை. சமயம் நேர்ந்துழி இக்கிரந்தத்தை யொட்டி இ[illegible]டங்கிய உண்மைகள் சிலவற்றை சவிஸ்தாரமாயெடுத்துரைப்போம்.

### 3. பிராசீனதர்மங்களின் உயர்வும் இக்கால ஆசாரங்களும்—விலை-6 அணு.

இத்தலைப்பின்கீழ் அதே ஆசிரியர் மிஸ்ஸஸ் அந்நிபெஸன்ட் அம்மாள் ஆங்கிலத்தில்செய்த உபந்நியாசங்களை மொழிபெயர்த்திருப்பது மிகவும் உபயோகமானதாகவும் வாசிக்க இரசமாகவுமிருக்கிறது. இவ்விரண்டு புஸ்தகங்களும் மதுரை தியஸாபிகல் சங்கத்திலும், புதுமண்டபம் புஸ்தக ஷாப்புளிலும் விலைக்குகப்படும்.

### 4. பகவத்கீதையும்ஸ்ரீசங்கராசார்யபாஷ்யமும்.

சுருதிஸ்மிருதியிதிஹாஸ முதலான ஸகல வேதார்த்தஸாரங்களையும் ஒன்று. சேர்த்து 700-சுலோகங்களில் அருமையாகக் கட்டபட்ட பகவத்கீதையின் மஹிமையைநாம்ஸ்துதி செய்ய வேண்டுவதில்லை. பரம்பொருளினுடைய உண்மையை உணர்த்தும் பகவானுடைய திருவாக்குக் கீதையென்றால் பின்னுமதை ஸ்தோத்திரம் செய்யவும்வேண்டுமோ. இப்படிப்பட்ட மஹிமைபெற்ற நூலின் பொருளை ஸம்சய விபரீதமற உணர்வதற்கு ஸ்வானுபவச் செல்வார்கள் செய்த வியாக்கியானமின்றியமையாச் சாதகமாகும். ஆகையால் இந்த பகவத்கீதையை மூலகிரந்தத்தோடு, ஸ்ரீசங்கரபகவத்பாதாசாரியஸ்வாமிகள் இயற்றிய பாஷ்யத்தையும் கிரந்தத்தில் அச்சிட்டு, அவற்றிற்குத் தமிழுரையும் பிரசுரித்து, முற்றிலும் சம்ஸ்கிருதத்தில் தேர்ந்த ஞானமில்லாத தமழறிந்த விவேகிகளும் இக்கிரந்தத்தை அர்த்தவிசாரஞ்செய்து பொருளுணர்வு சுவையுணர்வோடு பாராயணம் செய்துவரச் சாதகமாக, இக்கிரந்தத்தை கிரந்தாக்ஷரத்தில் மூலமும் தமிழில் மொழிபெயர்ப்புமாக 12-சஞ்சிகையில் பூர்ணமாக முடியும்படி சங்கல்பித்து அதன் முதல்சஞ்சிகையையச்சிட்டு வெளிப்படுத்தியிருக்கிற ம-া-ா ஸ்ரீ த. சுந்தரராஜ சர்மா அவர்களுக்குத் தமிழுலகம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறது. மற்ற சஞ்சிகைகளும் வெளியானபின் இதன் மகிமையைப் பற்றிச் சற்று விவரித்து எழுதலாமென்று எண்ணியிருக்கிறோம்.

### 5. பிரம்ம சூத்ரார்த்த தீபிகை.

ம-ா-ா ஸ்ரீ வ சிவராவ் அவர்கள் லோகோபகாரார்த்தமாய்ப் பிரசுரித்துவரும் பிரம்மசூத்ரார்த்த தீபிகை மொழிபெயர்ப்பு முதலத்தியாயம் 4-பாதங்களும் முடிந்து 2-வது அத்தியாயம் முதல் சஞ்சிகை வந்திருக்கிறது. இக்கிரந்தத்தின் மகிமையை பிரம்மவித்துக்களே நன்குணர்ந்து மகிழத்தக்கவர்கள். ஸம்ஸ்கிருத பாஷாஞானம் வேண்டிய அளவில்லாத சத்துக்களும் அநுஷ்டானபலத்தைக்கொண்டும்அநுபவ விசேஷத்தைக்கொண்டும் சுருதியுக்தி யனுபவமாகத் தங்கள் அநுபவத்தைச் சோதித்துக்கொள்ள சாதகமாகவும், விசார புருஷர்கள் நிரவிசாரம் செய்தவற்கனுகூலமாகவும் இக்கிரந்தத்தை மொழிபெயர்த்த பிரம்மஸ்ரீ இராமச்சந்திர சாஸ்திரிகளுக்கும் அதை ஆராய்ந்து பதிப்பிக்கும் ம-ா-ா ஸ்ரீ சிவராவ் அர்வகளுக்கும் மஹா ஜனங்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

### 6. RAMBLES IN THE VEDANTA.

**PRICE Rs. 3.**

**வேதாந்த விசாரம்.**

கமலாம்பாள் சரித்திரத்தின் கிரந்தகர்த்தாவாகிய பி, ஆர். ராஜமய்யரவர்கள், தனக்கு ஈசுவர கடாக்ஷம் கிடைத்தபின் வேதாந்த விசாரத்தில் இறங்கி பரோபகாரமாக அவருடைய எண்ணங்கள் அபிப்பிராயங்களை வெளியிட்டதோடு, பரமார்த்த வுண்மையை வேடிக்கை வேடிக்கையான கதைகள் ரூபமாகவும், உண்மைவிளங்கும் உத்தம வியாசங்கள் ரூபமாகவும், சம்பாஷணை ரூபமாகவும், மனன ரூபமாகவும், வெளியிட்டுப் போதித்த விஷயங்களை, அவர் பிந்தியிருந்த 2-வருஷகாலத்தில் அவர் நடத்திய பிரபுத்தபாரதா என்னும் பத்திரிகையிலிருந்தெடுத்துச் சேர்த்துப் புஸ்தகரூபமாக அவரது திருவுருவப் படத்தோடு பிரசுரித்திருக்கிறது மிகவும் மேலாய் விளங்குகிறது. வேதாந்த விசாரிகளும் உண்மையுபாஸகர்களும் இக்கிரந்தத்தை வாங்கி யுபயோகிக்கின் பெரும்பயன் பெறுவார்கள்.

—(*)—

உ

# LALITHAMBAL SOBHANAM.

பராதேவி துணை.

## லலிதாம்பாள் சோபன விஷயச்சுருக்கம்.

*(From Sri R. S. Subbalakshmi Ammal.)*

இந்த லலிதாம்பாள் சோபனம் மலையாளத்தில் கவனம் பண்ணப்பட்டு அவ்விடத்தியாரால் வெள்ளிக்கிழமை, செவ்வாய்க்கிழமை, நவராத்திரி, முதலிய புண்ய தினங்களில் ஆசாரநியமத்துடன் சோபன முழுமையும் பக்தியுடன்பாடி, அல்லது பாடச்சொல்லிக்கேட்டு, பாயஸம், பழம் தாம்பூலம் முதலிய நைவேத்யம்செய்து குழந்தைகள், சுமங்கலிகள் முதலியவர்களுக்கு விநியோகஞ்செய்து தேவியைப் பிரார்த்தித்து வணங்குகிறார்கள். இப்படிப்பட்ட தேவியின் மகிமைபொருந்திய சோபனத்தை அச்சில் போட்டால் தேவிபக்தியுடையவர்கள் அனேகருக்குப் பாராயண யோக்யமாகுமென்று தேவியின் அருளை முன்னிட்டு இதை அச்சில்போட அனுப்பலானேன். வாய்ப்பாடமாகக்கேட்டு எழுதினதில் உண்டாயிருந்த அனேகந்தப்புகளைக்கூடியவரைக்கும் திருத்தி எழுதி இருக்கிறேன். இதின் முக்கிய விஷயம் என்னவென்றால்:—துஷ்டநிக்ரகம், சிஷ்டபரிபாலனத்திற்காகவெடுத்த, தேவியின் சில அவதாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அதில், மகாவிஷ்ணு அவதாரங்கள் சிலவும் தேவியினுடையதாகவே சொல்லப்பட்டிருக்கின்றன. அதெப்படி என்றால், பரமேஸ்வரனுக்கு தேவியும் விஷ்ணுவும் ஒன்றுதான். ஸ்ரீ மகாவிஷ்ணு, ஸ்ரீ கிருஷ்ணன், ஸ்ரீ ராமன் என்றுசொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்ரீ என்கிற பதத்திற்கு அருத்தம், மங்கள சப்தம் என்பதுடன், ஸ்திரீ—என்றும் ஒரு அருத்தமுண்டு. தேவியின் அம்சந்தான் விஷ்ணு, விஷ்ணுவின் அம்சந்தான் தேவியென்றும், அதினால் தேவியும் விஷ்ணுவும் சகோதரர்கள் என்றும் சொல்லியிருக்கின்றது. மேலும் விஷ்ணு மோகினியாய் ரூபமெடுத்த காலத்தில், ஈஸ்வரன் மோகினியை அடைந்து அரிஹர புத்திரருண்டானதாயும் சொல்லப்பட்டிருக்கின்றது.

"ஒருபாதி மால்கொள, மற்றொருபாதி உமையவள் கொண்டிருபாதியாலும் இறந்தான்புராரி"—என்று ஒருகவிசொன்னபடி அர்த்தநாரீசர் என்றும், சங்கரநாராயணர் என்றும், ஈஸ்வரனுக்கு இரண்டு நாமதேயமும் ஐதிகமும் ஏற்பட்டிருக்கின்றது. ஆனதால் விஷ்ணுவினால் செய்பப்பட்டிருப்பதாக விஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கும் அவதாரங்களை இந்தச் சோபனத்தில் தேவியால் செய்யப்பட்டதாகவே வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. இதைச்செய்தவர் கவனம் பண்ணினவராய்ச் சொன்னதல்ல—லலிதாஸஹஸ்திரநாமத்தில் சொன்னதைத்தான் இவர் பாடியிருக்கின்றார். அதாவது, திருப்பாற் கடலில் ஆலிலைமேல் விஷ்ணு சயனித்திருக்கும்போது, நாபிக் கமலத்தில் தாமரைப் புஷ்பம் உண்டாகி அதிலிருந்துபிரும்மா வெளியில்வந்து ஒன்றுந் தெரியாமல் மயங்கி தேவியைத் தியானிக்க, தேவி அவருக்கு பிரஸந்நமாகி அவர் மயக்கத்தைத் தெளிவித்து அவருக்கு சிருஷ்டிக்கும் வல்லமையை உண்டாக்கியும், மகாவிஷ்ணுவின் யோகநித்திரையைக் கலைத்து, மதுகைடவர் என்ற அசுரர்களைக் கொல்ல உபாயமும் சாமர்த்தியமும் அளித்துவிட்டு மறைந்துவிட்டாள். இது தேவிக்கு முதலாவது அவதாரம்.

தூர்வாஸ மஹரிஷியின் சாபத்தால் இந்திரன் ஐஸ்வரியமெல்லாமிழந்து அஸுரர்களை உபாயத்தால் ஜயிக்க ஆலோசித்து, தேவர்களும் அஸுரர்களும் சேர்ந்து திருப்பாற்கடல்கடைய அதிலிருந்து உத்தமமான வஸ்துக்களும், அமிர்தமும் உண்டானவுடன், அஸுரர்கள் பலாத்காரமாய் அமிர்தத்தை எடுத்துப்போகும்போது, தேவர்கள் பரதேவியைத் தியானம் பண்ணினார்கள். அம்பிகை மோகினி வேஷத்துடன் பிரசந்நமாக வந்து—அஸுரர்களை மயக்கி அமிர்தத்தை வாங்கி தேவர்களுக்கும் பங்கிட்டுக்கொடுத்து தேவர்களுக்கு சகலசாம்ராஜ்யமும் சாவில்லா வரமுங்கொடுத்துவிட்டு - மோஹினி ரூபத்தைக்கண்டு மயங்கின ஈசனிடத்தில் சேர்ந்து அரிஹரபுத்ரரை உண்டாக்கிவிட்டு அந்தர்த்தானமடைந்தாள்—இது தேவியின் இரண்டாவது அவதாரம்.

தக்ஷப் பிரஜாபதியின் தபஸால் அவருக்கு புத்திரியாகி, தாக்ஷாயனி என்ற நாமத்துடன் ஈசரை அடைந்து இருக்கும்போது—தக்ஷப்பிரஜாபதி அகம்பாவத்தால் ஈசருக்கு அவிர்ப்பாகம் கொடுக்காமல் யாகம் நிறைவேற்றுவதை தேவிகண்டு இந்த துஷ்டனால் வளர்க்கப்பட்ட தேகத்தையும் நாமத்தையும் விடவேணுமென்று எண்ணி யாகாக்னியில் குதித்து தேகத்தை ஒழித்துவிட்டாள். இது தேவியின் மூன்றாவது அவதாரம்.

ஹிமோத்பர்வத ராஜாவினுடைய தபத்திற்கிரங்கி குழந்தை ரூபமாய் அவரிடஞ்சென்று அவரால் வளர்க்கப்பட்டு பார்வதி என்ற நாமதேயத்துடன் பரமசிவனைக்குறித்து, ஈசன்சொல்லை மறுத்து தக்ஷப்ரஜாபதியிடம் தான்போன குற்றம் நீங்கத், தபஞ்செய்து பரமேசரை அடைந்து - தேவர்கள் வேண்டுகோளால் குமாரரை உண்டாக்கி தன்பேரால் விளங்கும் சக்தி வேலாயுதத்தைக் குமாரமூர்த்திக்கு அளித்து அவரால் சூரன் முதலிய அஸுரர்களை வதைத்து தேவர்களுக்கு நன்மையை அளித்தாள். இது தேவியின் நான்காவது அவதாரம்.

ஈஸ்வரன் மன்மதனை எரித்தபோது விசுவகர்மா என்பவர் அந்தச் சாம்பலைப்பிசைந்து ஒருமனித உருவாய்ப்பண்ண ஈசரின் கிருபையான பார்வையால் அந்தப் பொம்மைக்கு உயிருண்டாய்விட்டது—சுவாமியின் கோபாக்னியின் சாம்பலில் உண்டானதால், அவன் அஸுரனாகி பண்டாஸுரனென்ற பேருடன் தேவர்களைப் பெரும்பாடு படுத்தவே-தேவர்கள் அம்பிகையைக்குறித்து ஸ்ரீவித்தை என்ற ஜெபம்பண்ணி, (மந்திரயந்திரதந்திரௌபரஸனஹுதியென்கிற பஞ்சாங்கங்களும் பொருந்த) தங்கள் உடம்பையறுத்து ஓமம் பண்ணினார்கள். அந்த ஓமகுண்டத்தின் மத்தியில் ஸ்ரீசக்கரமென்கிற ரதத்தில் அம்பிகை பிரத்தியக்ஷமாகி தேவர்கள் உடம்புகாயங்களை ஆற்றி, அவர்களால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டு லலிதாம்பாள் என்ற நாமதேயத்துடன் ஈசரை அடைந்து அனேகஞ் சக்திகளை உண்டாக்கிக்கொண்டு பண்டஸுர சைன்யங்களையும் பண்டாஸுரனையும் சம்ஹாரம் பண்ணிவிட்டு - சிந்தாமணிக்ரகத்தில், காமேசருடன் சௌபாக்கியவதியாயிருந்தாள்;—இது தேவியின் ஐந்தாவது அவதாரம்.

இந்த லலிதா அவதாரமும் பண்டாஸுர யுத்தமுந்தான் இந்தச் சோபனத்தில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த மஹா தேவியின் மகிமைகளை ஒருவராலும் வர்ணிக்க முடியாதானாலும் இந்தச் சோபனத்தில் சொல்லி இருக்கின்றமட்டும் படித்தாலுங்கூட மனதிற்கு விஸ்ராந்தியும் ஆனந்தமும் உண்டாகிறதென்பதில் தடையில்லை.- –

ஓம தத்ஸத். பிர்மார்ப்பிதமஸ்து.

உ

பராதேவி துணை.

லலிதாம்பிகாயை நம:

## லலிதாம்பாள் சோபனம்.

('சீர்மேவுந் தில்லை' என்ற கும்மி ராகத்திலும் பாடலாம் :)

1.

மங்களமான லலிதாம்பாள் சோபனம்
  மங்களமுண்டாகப் பாடுகிறோம்.
ஸ்ரீங்கார கணபதி ஷண்முகர் ஸரஸ்வதி
  எங்கட்கு முன்வந்து காப்பாமே.
முப்பத்து முக்கோடி தேவாளும் இந்திரனும்
  மும்மூர்த்திகளும் வேதப்பிராமணரும்
நாற்பத்து முக்கோண நாயகியானம்மன்
  நாதர் காமேசருங் காப்பாமே.

**காஞ்சி நகரத்தில் காமகோடி பீடத்தில் எழுந்தருளியிருக்கும் காமாக்ஷியம்மையை நோக்கி அகஸ்திய மஹரிஷி தபஸிருத்தல்.**

2.

ஆதி பிர்மரிஷி அகஸ்தியரும்
  அகிலலோகம் சஞ்சரிப்பவரும்,
ஜோதி காமாக்ஷியை காஞ்சிநகரத்தில்
  ஸ்துதித்துப் பூஜைபண்ணித் தபவிருந்தார்.
சங்கு சக்ரம் வலக்கை புஸ்தகமும்
  தரித்தே ஹயக்கிரீவர் மகா விஷ்ணுவாய்
தங்கவர்ணி லோபா முத்திரைமணவாளன்
  தபவிற்குமுன்வந்தார் சோபனம் சோபனம்.

3.

எட்டிரண்டுபசார பூஜைகள் முதலாக
  எல்லாவற்றையும்பக்தியுடனேசெய்து
சாஷ்டாங்கமாகநமஸ்கரித்துமந்த
  அகஸ்தியர்வேதத்தால்ஸ்துதித்துநின்றார்.
கும்பமுனியுடைதபஸாலேமனம்
  குளிர்ந்தயக்கிரீவருந்தானுரைப்பர்:
இன்பமாகச்செய்தாய்பூஜையகஸ்தியா
  என்னவேணுமென்றார் சோபனம் சோபனம்

4.

தாரகவதனருடைஅமிர்தவசனங்கேட்டு
  சொல்லுவர்மித்திரவருணபுத்ரர்
அபயவரதகா அருமையாய் நான் கேட்கும்
  வரந்தரவேணுந் தயவுசெய்து.
கலியுகந்தனிலிந்தப் பாமர ஜனங்கட்கு
  கைவல்யஞானம் எப்படி யுண்டாகும்
எளிதாகவே ஒரு உபாயஞ் சொல்லுமென்று
  இரந்து கேட்கலுற்றார் சோபனம் சோபனம்.

5.

ஆதரவுடன் ஜனங்களுக்குபகாரமாய்
  அகஸ்தியர்க்கு ஹயக்ரீவர் எடுத்துரைப்பார்.
ஏதகஸ்தியரே இந்தப்பிரச்னந்தான்சியவனருக்
  கென்னாலே முன்னஞ்சொல்லப்பட்டது.
ஆனாலும் நீர் கேட்டது சொல்லுவோமிப்போ
  அன்புடன் கேளும் ஏகமனதாய்.
இன்றுமுதல் உமக்குபதேசத்தினாலே
  எல்லோரும் சேட்கட்டும் சோபனம்சோபனம்.

6.

ஆதி பராசக்தியனுக்ரகத்தால்
  ஆத்மக்ஞானம் வரும் மானிடர்க்கு.
மாதவர் மாய்கை யில்லாதே விட்டாலிந்த
  மானிடவர்க்கு மயக்கமில்லை.
ஹயக்கிரீவர் சொற்கேட்டு அகஸ்தியர் பின்னும்
  ஆதி பராசக்தி ரூபங்களை.
தயவுசெய்துஎனக்குச்சொல்ல வேணுமென்று
  தண்டனிட்டுக்கேட்டார் சோபனம்சோபனம்

7.

அந்த ஹயக்கிரீவர் தம்முடை மனதிலே
  அம்பிகை பாதத்தை நமஸ்கரித்து
இந்த அகஸ்தியர் கேட்பதெல்லாஞ்
  சொல்லுவமென்று எழுந்தருளினார் அச்வமுகர்
அகஸ்தியரந்த ஹயக்கிரீவரைத் தன்
  ஆசிரமத்தில் கூட்டிக்கொண்டு வந்து,
பகவானை ஆஸனந் தன்னில்வைத்துப்
  பணிந்து கேட்கலுற்றார் சோபனம் சோபனம்.

8.

"பகவானே! தர்ம ஸாஸ்திரங்களெல்லாம்
  பிறந்தது உம்மிடந்தனிலிருந்து.
மகதேவியுடைய அவதாரங்களை
  மாதவா விஸ்தரித்துச் சொல்லவேணும்."
அன்புடன் கேட்ட அகஸ்தியரை வாழ்த்தி
  ஹயக்கிரீவ மூர்த்தியும் எடுத்துரைப்பர்;
அம்பிகையுடைய அவதாரங்கள் சொல்ல
  ஆரம்பித்தாரப்போ சோபனம் சோபனம்.

**மகா விஷ்ணுவின் அம்சாவதாரமாகிய ஹயக்கிரீவர் அகஸ்திய மஹா ரிஷிக்குத் தேவி மஹாத்மியத்தைச் சொல்ல ஆரம்பித்தல்.**

9.

ஆதியந்தம் பரா சக்திக்கில்லை
  ஆதாரமுஞ் ஜகத்துக் கிவள்தான்.
சோதி ரூபியோடே ரூபங்களை
  சொல்லமுடியா தொருவராலே.
ஆனாலுந் தெரிந்த மட்டுக்கு மிப்போ
  அவளுட சில அவதாரஞ் சொல்வோம் :
முன்னே பிர்மாவுடை த்யானத்தில் ரக்ஷிக்க
  முதல்வந்தாள் ஒரு ரூபம் சோபனம்சோபனம்

10.

முன்னாளில் தேவேந்திரன் வெள்ளானை ஏறி
  மூன்று உலகஞ் சுற்றிவரும்போது,
தன்னிணையில்லாத மதத்தினால் உமையவள்
  சங்கரரையும் வணங்காமல் வந்தான்;
இந்திரன் மதத்தை யடக்கவேணுமென்று

எவினார் ஈசரும் தூர்வாஸரை :
வந்த தூர்வாஸரும்இந்திரன் கையிலொரு
மாலையைக் கொடுத்தார் சோபனம் சோபனம்.

11.

வாங்கி மாலையை இந்திரன் யானையினுடைய
மண்டையில் வைத்தான் மதத்தினாலே!
ஓங்கித் துதிக்கையால் எடுத்தானை மாலையை
உதறிப் பூமியில் காலால் சுவட்டிற்று!
தூர்வாஸ முனி கண்டு அதிகோபத்துடனே
துர்ப்புத்தி இந்திரனைச் சாபமிட்டார்.
(உன்) கெர்வமல்லவோ இந்திரா இது செய்யச்
[சொல்லிற்று
கெர்வேச்வரி போமென்றார் சோபனம் சோ
[பனம்.

12.

சபித்துவிட்டு முனி போகியபின்பு
சக்ரேசன் அமராபுரியில் வந்து,
அபசகுனங்களைக் கண்டு பயந்து
ஆசாரியர் பிரஹஸ்பதியை வருத்தி,
ஆசனத்தில் வைத்து நமஸ்கரித்து
அவரைப் பார்த்திந்திரன் எதுரைப்பான்:
தேசத்தில் துர்நிமித்தம் காணுகின்றதே
தேவரீர் போக்குச் சொல்லும் சோபனம்
[சோபனம்.

13.

தேவகுருவுங் கேட்டுச்சொல்வர் இந்திரனோடு
செய்த கர்மம் அனுபவித்தே தீரும்.
பாப கர்மம் அனுபவித்தாற்றான் தீரும்
பிராயச் சித்தத்தினால் போவதில்லை.
நிவிர்த்தியினாலே ஒருநாளும் போகாது
லெக்ஷங்கோடி ஜன்மம் ஆனாலும்.
ஒன்றுகேள் பாபத்துக்கு நிவிர்த்திவாஸவனே
உண்மை நான் சொல்லுவேன் சோபனம்
[சோபனம்.

14.

ஹத்தி திருட்டு ஹிம்ஸை பானம் பாதானம்
அஞ்சும் பஞ்ச மகாபாதகமாம்.
அறியாத் தனத்தாலே ஐந்துபாபமும்செய்தால்
அந்தந்தச் சாதிபோல் நிவிர்த்தியுண்டாம்.
பிரஹ்மஹத்திக்கொரு ஸாஸ்திரத்திலுமில்லை
பிராயச் சித்தம் ஒருநாளுமிந்திரா!
திருட்டென்ற பாபத்திற்கு உபகதை யொன்று
[சொல்வேன்
தேவேந்திரா கேளு சோபனம் சோபனம்.

15.

களவுதொழிலெங்கும்செய்துகொண்டுவரும்
கள்ளனொருத்தன் காஞ்சிப் பட்டணத்தில்,
களவாண்ட பணங்களை கனமாய்ச் சேர்த்து நடுக்
காட்டிற் கொணர்ந்து புதைத்துவைத்தான்.
கள்ளனுக்கு கிள்ளன் வேடனொருத்தன் அதைக்
கண்டு வனம்போனான் பின்னாலே.
மெள்ளவந்தந்தப் பணங்களை யெல்லாம்
முற்றிலும் எடுத்தான் சோபனம்சோபனம்.

16.

கொண்டுவந்தந்தப் பணங்களை யெல்லாம்
கொண்ட பெண்டாட்டி கையிற் கொடுத்தான்
பெண்டாண்டி வாங்கி யுள்ளே வைத்துக்கொ
[ண்டு
புருஷனைப் பார்த்தொரு வாக்குரைப்பாள்:
* வால்மீகர் சாபத்தால் வேடர்க்கு தனங்கள்
விருத்திக்க மாட்டாது அதனாலே
நன்மையாய் நான் சொன்ன தர்மஞ் செய்தால்
[வெகு
நாளிருக்குந் தனம் சோபனம் சோபனம,

(இன்னும் வரும்.) ஆர். எஸ். சுப்பலக்ஷ்மி அம்மாள்.

* ஒரு பிராம்மணன் தன் நெறி தவறி கிராதகத் தொழில் செய்தபடியால் மறு ஜென்மம் வேடனாய் பிறந்தான். அவன் காட்டில் போவார் வருவாரை எல்லாம் வழிமறித்துக் கொள்ளையடித்து ஜீவனம் பண்ணிக்கொண்டிருந்தான். ஒருகாலத்தில் சப்தரிஷிகாள் அந்த வழிபோக அவர்கள் பொருளை அபகரிக்க அவர்களை வழிமறிக்கும்போது அந்த ரிஷீஸ்வரர்கள் அவனைப் பார்த்து அப்பா இப்பேர்ப்பட்ட கொடுந்தொழிலை விட்டு நல்லமார்க்கமாக இருவென்று சொன்னார்கள். அதற்கு வேடன் சுவாமிகாள் என் குடும்பங்களை நான் காப்பாற்றவேண்டியிருப்பதால் வேறு தொழில் அகப்படாமல் இதைத்தான் செய்து குடும்பங் காப்பாற்றுகிறேன் என்று சொன்னான். இதைக்கேட்ட ரிஷிகள் இந்தப் பாபத்தொழிலால் வரும் சம்பாத்யத்தை உன் குடும்பத்தார் அனுபவிக்கிறார்களே இதனால் வரும் பாபத்தையும் அவர்கள் பாகம்போட்டு அனுபவிப்பார்களா என்று அவனைக் கேட்டுவரும்படி சொன்னார்கள், அவன் வீடு சென்று தன் பெண்டாட்டி பிள்ளைகளை ரிஷிகள் சொன்னபடி கேட்க அவர்கள் இது எங்கேயாவது உண்டா? சம்பாதித்து போடுவதுதான் உன் கடமை. பாபம் பங்கிட்டுக்கொள்வது எங்கள் கடமையல்ல என்று சொல்லிவிட்டார்கள். இதைக் கேட்டவுடன் வேடன் வருத்தங்கொண்டு உங்கள் குலத்திற்கே ஐஸ்வர்யஞ்சேராமல் போகக்கடவதென்று சபித்துவிட்டு ரிஷிகளிடம் ஓடிவந்து சுவாமிகாள் எனக்கு நல்ல கெதிக்குவழி சொல்லிவிட்டுப் போகவேணுமென்று கெஞ்சினான். மஹரிஷிகள் இரங்கி தாரக மந்திரமாகிய ஸ்ரீராம நாமத்தை உபதேசித்தார்கள். நாமம் நாவில் நுழையவில்லை. அப்பொழுது அங்கிருந்த மராமரத்தைக் காட்டி இதன் பேரை விடாமல் சொல்லிக்கொண்டிருந்தயானால் முக்தனாவாய் என்று சொல்லிவிட்டுப் போனார்கள். இந்த நாமப்ரபாவத்தினாலே அவர் மஹா ரிஷியாகிய வால்மீகியானார் என்று புராணம்.